# இளைஞர்குல திலகம்



கருப்பையா.பி.ஏ.

தமிழ்ப்பண்ணை
தியாகராய நகரம். சென்னை-17

# பதிப்புரை

இளைஞர்களின் கரங்களிலேதான், எதிர் கால பாரதத்தின் நம்பிக்கை ஒளி அடங்கியிருக் கிறது. அவர்களின் எழுச்சி மிக்க செயலாற்ற லும், தெளிந்த சிந்தனையும்தான் நவபாரதத் தின் முன்னேற்றத்திற்கு வழி வகுக்க முடியும் எனச் சிந்தனையாளர்கள் கருதுகின்றனர்.

அப்படிப்பட்ட இளைஞர் குலத்திற்குத் திலக மாக விளங்கியவர்தான் திரு. எஸ். என். ஏ. அஜீஸ் அவர்கள். அவருடைய தியாக புத்தியை யும், துடிப்பு மிக்க ஆற்றலையும், சேவை மனப் பான்மையையும் விளக்கி ஒரு ஒழுங்கான சித்திரத்தை இந்நூலின் மூலம் தந்திருக்கிறார் திரு. கருப்பையா அவர்கள்.

அஜீஸ் அவர்களின் ஒரு சில நல்ல கட்டுரை கள் இதில் இடம் பெற்றிருப்பதோடு, அவருடைய சேவையின் உயர்வைப் பற்றி அறிஞர் பலரின் பாராட்டுரைகளும் சேர்ந்து நூல் மணம் பெறுகிறது.

இத்தகைய நூல்கள் வருங்காலச் சந்த திக்குப் பெரிதும் பயனுள்ளவையாக அமையு மென்பதில் ஐயமில்லை. இந்தச் சீரிய பணி யினைச்செய்து முடித்திருக்கும் திரு. கருப்பையா அவர்களுக்கு எங்களது நன்றி.

அன்பன்,

சின்ன அண்ணாமலை.

# அஞ்சலி

எளிமை, தியாகம், அடக்கம், நேர்மை ஆகியவற்றுக்கு இலக்கணம் வகுத்த தூய தேசபக்தர் அஜீஸ். அவரைப் பற்றிய ஒரு படப்பிடிப்பு இது.

அஜீஸின் சொந்த ஊரான அறங்குடிக்கு நான் நேரில் சென்றேன். அவரது தந்தையாரையும், மூத்த சகோதரரையும் கண்டு பேசினேன். மாயூரம் நகரத்தில் அஜீஸுக்குத் தலைமையாசிரியராக இருந்த அன்பரை, டாக்டர் திரு. வரதாச்சாரி அவர்களுடன் பார்த்து உரையாடினேன். மாயூரத்தில் அஜீஸுக்குத் தமிழாசிரியராக இருந்த திரு. சிவானந்தம் அவர்கள் சில அரிய குறிப்புகள் கொடுத்து உதவினர். கும்பகோணம் திரு. கே. எம். எஸ். அவர்களையும் இருமுறை கண்டேன். தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் நிர்வாகி திரு. சேதுராமன், உணர்ச்சி மிக்க இளைஞர் திரு. சிவானந்தம் ஆகியோர் சில விவரங்களைத் தெரிவித்தார்கள். இவை அனைத்தின் விளைவாகவே அஜீஸின் வாழ்க்கை வரலாறு உருவாகியது. இது முதல் பகுதி.

மக்கள் தலைவர் திரு. காமராஜ் அவர்கள், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. ரா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள், தலைவர்கள், அமைச்சர்கள், சமயத் துறைத் தலைவர், இலக்கிய மேதைகள், கவிஞர்கள் ஆகிய பதினைந்து பெருந்தகையாளர்கள் அஜீஸைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். இது இரண்டாவது பகுதி.

பல்வேறு பிரச்னைகள் குறித்து அஜீஸ் அவர்கள் அவ்வப்போது எழுதிய சில கட்டுரைகளும், நிகழ்த்திய சில உரைகளும், மூன்ருவது பகுதியில், இடம் பெற்றுள்ளன.

இந்த நூல் உருவாக வேண்டும் என்பதில் மிகவும் அக்கரை கொண்டு, எனக்கொரு தூண்டுகோலாகத் துணை இருந்தவர், எனது கெழுதகை நண்பர் திரு. எஸ். ராஜமாணிக்கம் அவர்கள்.

இந்த நூலினை மிக்க உற்சாகத்தோடு வெளியிட முன் வந்த பழம்பெரும் தேசபக்தரான திரு. சின்ன அண்ணுமலை அவர்களுக்கும், சகோதரர்கள் திரு. சி. அ. சருணுநிதி, திரு. சி. அ. இராமையா ஆகியோருக்கும் எனது நன்றி.

நினைவிலே என்றும் நீங்கா இடம் பெற்றுள்ள நிர்மலமான அஜீஸுக்கு, இந்த நூல், எனது அஞ்சலி.

சென்னை-24<br>21-10-66

கருப்பையா.

# உள்ளே



## கட்டுரைகள்

### கவிதைகள்



இந்நூலாசிரியரும், திரு. எஸ். என். ஏ. அஜீஸ் அவர்களும்.

# வாழ்க்கை வரலாறு

## 1. அறங்குடிக் குடும்பம்

நமது தாய்நாட்டின் வளம் பெருக வேண்டும், மக்களின் வாழ்வு சிறக்க வேண்டும், பாரதத்தின் புகழ் பாரெல்லாம் பரவ வேண்டும், என்று தேசபக்தர்கள் பலர் அல்லும் பகலும் உழைத்து வருகிறார்கள். தேசபக்தர்களின் பேரியக்கமாக காங்கிரஸ் மகாசபை விளங்குகிறது. அதில் சேர்ந்து, தேச பக்தியே தெய்வ பக்தி என்று கருதித் தொண்டாற்றிய தீரர் திரு. அஜீஸ்.

'இந்தியாவே எனது வீடு; இந்திய மக்கள் அனைவருமே என் சுற்றத்தார்', என்று உளமார எண்ணி அவர் பணி புரிந்தார். தேச முன்னேற்றத்தைத் தவிர வேறு சிந்தனை எதுவுமே அவருக்கு இருந்தது இல்லை.

முப்பத்திரண்டு ஆண்டுகளுக்குள் அந்தத் தேசிய வீரரின் வாழ்க்கைப் பயணம் முடிவடைந்து விட்டது. அந்தக் குறுகிய காலத்திற்குள் அவர், பிறர் பார்த்துப் பயிலத்தக்க விதத்தில் வாழ்ந்து விட்டார்.

புகழ்மிக்க தஞ்சை ஜில்லாவில், மாயூரம் நகரத்திற்கு ஐந்து மைல் தொலைவில், அறங்குடி என்ற சிறிய கிராமம்

உள்ளது. அங்கு வாழ்கின்ற மக்கள் அனைவரும் அநேகமாக முஸ்லிம்களே. அந்தக் கிராமத்தில் ஒரு சிறிய வியாபாரியின் குமாரராகப் பிறந்தவர் அஜீஸ்.

அது ஒரு சாதாரணக் குடும்பம். திரு. நைனு முகமது மலேயாவுக்குச் சென்று சிறிய அளவில் வியாபாரம் செய்து வந்தார். அவருடைய சகோதரர்கள் பெரிய வியாபாரிகள். அவர்களுடைய ஆதரவிலே நைனு முகமது வாழ்ந்து வந்தார். அவருடைய மூத்த மகன் திரு. முகமது ஷெரீப் பதினொரு வயதிலேயே மலேயா சென்று சொந்தமாக வியாபாரம் தொடங்கினார். அதற்குப் பிறகு குடும்பம் முழுவதையும் சமாளிக்கும் பொறுப்பை மூத்த மகன் ஏற்றுக்கொண்டார்.

நைனு முகமது அவர்களின் இரண்டாவது மகனாகப் பிறந்தவர் எஸ். என். ஏ. அஜீஸ். முழுப்பெயர்—ஷேக் நைனு அப்துல் அஜீஸ். பிறந்த தேதி : 10-7-1934. அஜீஸின் தாயார் பெயர் ஹாதும் பீபி. தாய் வழிப் பாட்டனார் வட கரை கிராம முன்சீப்பாக இருந்தவர். அஜீஸுடன் மூன்று சகோதரிகள் பிறந்தார்கள். ஒருவர் இறந்துவிட்டார். மற்ற இரண்டு சகோதரிகளும் திருமணம் முடிக்கப்பெற்று நலமாக இருக்கிறார்கள்.

அஜீஸ் மூன்று வயதுக் குழந்தையாக இருந்தபோது அவருடைய தாயார் இறந்துவிட்டார். அந்த அம்மையாரின் மறைவுக்குப் பின் அவருடைய சகோதரி ஆமீனு பீபியை நைனு முகமது மறுமணம் செய்துகொண்டார்.

ஆமீனு பீபிதான் அஜீஸை வளர்த்தவர். குழந்தை அஜீஸின்மீது அவர் அளவற்ற அன்பு செலுத்தினார். தாயை மிக இளம் வயதில் இழந்த குறை அஜீஸின் மனத்தில் ஏற் படாமல் பரிவும் பாசமும் காட்டி வளர்த்தவர் அவரே.

அஜீஸின் குடும்பம் தெய்வ பக்தியும், மத நம்பிக்கையும் கொண்டது. அஜீஸுக்கும் இயற்கையிலேயே ஆழ்ந்த இறைமை உணர்வு இளம் வயது முதல் இருந்தது. சிறியவ ராக இருந்த போதே தினசரி நெடுநேரம் பிரார்த்தனை செய்

வார். மந்திரங்களை வாய்விட்டு உரக்கச் சொல்ல மாட்டார்; மனத்துக்குள்ளேயே சொல்லிக்கொள்ளுவார்.

எளிய குடும்பம், அன்பு நிறைந்த பெற்றோர், கிராமியச் சூழல், தெய்வ பக்தி—இத்தகைய சூழ்நிலையில் அஜீஸின் வாழ்க்கை தொடங்கியது.

## 2. சிறந்த மாணவர்

அறங்குடி—வடகரை போர்டு முஸ்லிம் பள்ளியில் அஜீஸின் படிப்பு ஆரம்பமாயிற்று. ஆறு அல்லது ஏழு வயது நடக்கும்போது அஜீஸுக்குக் கடுமையான வயிற்று வலி கண்டது. அந்நோய் நீண்ட நாட்கள் சிறுவனைத் துன்புறுத்தியது. அப்போதும் அவன் படிப்பை நிறுத்தவில்லை.

அறங்குடியில் படித்தபோதே அஜீஸுக்குச் காங்கிரஸ் பற்று இருந்தது. ஊர் முழுவதும் முஸ்லிம் லீக் கொடி கட்டிப் பறந்தது. சிறுவன் அஜீஸ் மட்டுமே அதற்கு எதிரி! முஸ்லிம் லீக் சுவரொட்டியையோ, துண்டுப் பிரசுரங்களையோ எங்கேனும் பார்த்தால் விடமாட்டான்; கிழித்தெறிந்து விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பான்!

1947–48-ல் மாயூரம் நகராட்சி உயர்நிலைப் பள்ளியில் அஜீஸை முதல் படிவத்தில் சேர்த்தார்கள். அங்கேயே தொடர்ந்து படித்து 1952–53-ல் எஸ். எஸ். எல். சி. வகுப்பில் அஜீஸ் தேறினான்.

மாயூரம் உயர்நிலைப் பள்ளிக்குத் தினசரி அறங்குடி கிராமத்திலிருந்து அஜீஸ் செல்லுவது வழக்கம். மண்ணம் பந்தல் என்ற ஊருக்கு அஜீஸ் ரெயில் வண்டியில் வருவான்; அவனுடைய தந்தை நைனா முகம்மது, அங்கேயே காத்திருந்து அவனை வீட்டிற்குக் கூட்டி வருவார்.

சிறுவன் அஜீஸ் காலை ஒரு இட்டிலி சாப்பிடுவான். கையில் ஒரு இட்டிலியைக் கொண்டு போய், பகலில் அதை உண்பான். மாலை வீடு திரும்பிய பிறகே சாப்பாடு!

அஜீஸ் படிப்பில் புலி. யாருமே தூண்டத் தேவையில்லை. ஒரு சிறிய மண்ணெண்ணெய் விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு இரவு நெடுநேரம் வரை படிப்பான். படிக்கும் போது தன்னை யாரும் தொந்தரவு செய்யக் கூடாது என்று அறைக் கதவை உள்பக்கத்தில் தாளிட்டுக் கொண்டு விடுவான்.

பள்ளிக்கூடத்தில் ஆசிரியர்களிடம் அடக்கமும் பணிவும் கொண்ட மாணுக்கனுக அஜீஸ் விளங்கினுன். வகுப்புத் தலைவன், பள்ளி மாணவத் தலைவன், இலக்கிய மன்றச் செயலாளன், பள்ளிப் பாராளுமன்ற சபாநாயகர்—இவ்வாறு பலப் பொறுப்புக்களில் பணியாற்றிய அஜீஸ், மாணவர்களின் முன்மாதிரியாகத் திகழ்ந்தான்.

பள்ளித் தலைமையாசிரியராக இருந்த என். எஸ். கிருஷ்ண மூர்த்தி ஐயர் அவர்கள் வேறு பள்ளிக்கு மாற்றப்பட்ட போது, அஜீஸ் அவர்மீது கொண்டிருந்த பற்றினுல், அந்த மாற்றல் உத்தரவை எதிர்த்துப் பெரியதொரு போராட்டமே நடத்தி வெற்றி பெற்ருன்!

உயர்நிலைப் பள்ளிப் படிப்பின்போது கடைசி இரண்டு ஆண்டுகளில் அஜீஸுக்குத் தலைமையாசிரியராக இருந்தவர் திரு. எஸ். சேஷகிரி. அப்பெரியாரை இந்நூலாசிரியர் மாயூரம் சென்று நேரில் கண்டார். அஜீஸைப்பற்றிய தமது கருத்துக்களை அவர் அப்போது தெரிவித்தார்.

"அஜீஸ் பயந்த சுபாவமுள்ள மாணவர்; ஒழுக்கமும் நன்னடத்தையும் கொண்டு விளங்கியவர்; ஆசிரியர்களிடத்திலும், பெரியவர்களிடமும் மரியாதை கொண்டவர்; பள்ளிக்கூடத்தில் நடைபெற்ற எல்லா இலக்கியச் சொற்பொழிவுகளிலும் அவரே முதற்பரிசு வாங்கினுர்; அவரைப் போன்ற நல்ல குணமுள்ள ஒரு மாணவரைக் காண்பது மிகவும் அரிது."

—இவ்வாறு திரு. சேஷகிரி அவர்கள் மிகவும் உணர்ச்சியோடு கூறினுர். 'அஜீஸ் என்னிடத்தில் மட்டுமல்ல, என் பிள்ளையினிடமும் படித்திருக்கிருர். லயோலா கல்லூரியில்

அஜீஸ் படித்தபோது என்னுடைய மகன் திரு. நடராஜன் அவருக்கு விரிவுரையாளராக இருந்தார். அஜீஸின் அகால மறைவு கேட்டு என்னைவிட என் மகனே மிகவும் அதிர்ச்சி யடைந்தார்'' என்றும் திரு. சேஷகிரி கூறினர்.

அஜீஸ் உயர்நிலைப்பள்ளி மாணவனுக இருந்தபோது அவருக்குத் தமிழாசிரியராக விளங்கியவர் வித்துவான் திரு. பி. சிவானந்தம் அவர்கள். தம்முடைய ஆசிரியர்களை இறுதி வரையில் உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றியவர் அஜீஸ் என்பதை அவர் குறிப்பிட்டார்.

மாயூரம் உயர்நிலைப் பள்ளியில் 18-9-65—ந் தேதியன்று மாணவர் இலக்கிய மன்றச் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. அமெரிக்காவில் தாம் கண்டவற்றை அக்கூட்டத்தில் அஜீஸ் எடுத்துரைத்தார். அந்த நிகழ்ச்சிக்காகச் சென்றிருந்த போதும் தமது பழைய ஆசிரியர்களிடம் அவர் மிகவும் அன் போடும் மரியாதையோடும் பழகினர். ''என்னுடைய வாழ்க்கையில் ஏற்படும் எல்லா முன்னேற்றங்களுக்கும் நான் இங்கு பெற்ற பயிற்சியே காரணம்'' என்று அஜீஸ் உணர்ச்சி யோடு குறிப்பிட்டார்.

1951-ம் வருடம், அஜீஸ் மாயூரத்தில் படித்துக்கொண் டிருந்தார். அப்போது பழம் பெரும் அரசியல் தியாகியான திரு. ஏ. எம். இஸ்மாயில் அவர்கள் வரவேற்புக் குழுத் தலைவ ராக இருந்து மாயூரம் இளைஞர் மாநாட்டையும், அரசியல் மாநாட்டையும் இரண்டு நாட்கள் மிக்க சிறப்பாக நடத் தினர். தலைவர் திரு. காமராஜ் அவர்களும் மற்றும் பல தலைவர்களும் அந்த மாநாட்டில் கலந்துகொண்டார்கள். இளைஞர் அஜீஸ் அந்த மாநாட்டின் வெற்றிக்காகக் கடுமை யாக உழைத்தவர்களுள் ஒருவர்.

அஜீஸ் மாயூரம் உயர்நிலைப் பள்ளியில் படித்துக்கொண் டிருந்தபோது ஒருமுறை பள்ளியின் ஆண்டு விழாவுக்கு டாக்டர் திரு. சி. பி. இராமசாமி அய்யர் அவர்கள் வந்திருந் தார். அவர் எதிரில் அஜீஸ் எழில் மிக்க ஆங்கிலத்தில் பேசி அனைவருடைய பாராட்டுதலையும் பெற்ருர்.

இளமையிலேயே அஜீஸுக்குப் பத்திரிகை படிப்பதில் நிறைய ஆர்வம் இருந்தது. ஆனல் பத்திரிகை வாங்கும் வசதி இல்லே. எனவே தினசரி காலேயில் எழுந்ததும் கிராமத்தில் தமது வீட்டிற்கு அருகாமையில் உள்ள ஒரு உறவினர் இல்லத்திற்குச் சென்று பத்திரிகை படிப்பார். பிறகுதான் காபி குடிப்பார்.

அஜீஸின் மூத்த சகோதரர் மலேயாவிலிருந்து ஒவ்வொரு முறை வரும்போதும் தமது தம்பிக்காகப் பட்டாடைகளும், உயர்ந்த வெளிநாட்டுத் துணிகளும் கட்டுக்கட்டாகக் கொண்டு வருவார். ஆனல் அஜீஸ் அவற்றை அணிந்து கொண்டதே இல்லே. அவற்றைத் தமது நண்பர்களுக்கும், தெரிந்தவர்களுக்கும் கொடுத்து விடுவார். உயர்நிலேப் பள்ளியில் படித்த காலத்திலிருந்தே அஜீஸ் கதரையே உடுத்தி வந்தார்.

எஸ். எஸ். எல். சி. வகுப்பில் அஜீஸ் தேறியதும் அவருடைய பெரிய அண்ணன் 'மலேயாவுக்கு வந்து விடு' என்று அவருக்குக் கடிதம் எழுதினர்.

அதற்கு அஜீஸ் எழுதிய பதிலே அவருடைய சகோதரர் மிக்க உருக்கத்தோடு குறிப்பிடுகிருர். "தாய் நாட்டை விட்டு வெளியேறி அந்நிய நாட்டில் அடியெடுத்து வைக்க மாட்டேன்; எப்பாடு பட்டாவது என்னேத் தயவு செய்து மேலே படிக்க வையுங்கள்" என்று அஜீஸ் பதில் எழுதினர். அவர் விருப்பப்படியே கல்லூரியில் சேர்க்கப்பட்டார்.

## 3. கே. எம். எஸ். உறவு

திரு. கே. எம். ஷெரீப் அவர்கள் கும்பகோணம் நகரில் நீண்ட நெடுங்காலமாகக் காங்கிரஸ் இயக்கத்தில் தொண்டாற்றி வரும் பழம்பெரும் தேசபக்தர். அவர் ஒரு முறை அறங்குடி கிராமத்திற்குச் சென்ருர். அங்கே அவருடைய நெருங்கிய நண்பர் ஒருவர் வீட்டில் அஜீஸை அவர் ஒருநாள் சந்தித்தார்.

திரு. ஷெரீப் அங்கு போனபோது அந்த நண்பர் வீட்டில் இல்லே. இளேஞர் அஜீஸ் மட்டும் இருந்தார். அவர் ஷெரீப் உட்காருவதற்குப் பாய் போட்டு, அருந்துவதற்குத் தேநீர் கொடுத்து உபசரித்தார். அஜீஸைப் பார்த்தவுடன் ஷெரீப் மிகவும் வியப்படைந்தார். அந்த இளேஞரின் தெளிவான வார்த்தைகளும் உடல் தோற்றமும் அவருக்குப் பிரமிப்பை யூட்டின.

'இந்தப் பையன் என்ன செய்கிருன்?' என்று ஷெரீப் அவருடைய நண்பர் வந்ததும் கேட்டார். 'மாயூரம் உயர் நிலேப்பள்ளியில் எட்டாவதோ ஒன்பதாவதோ படிக்கிருன்' என்று பதில் வந்தது. ஷெரீப் நேராக மாயூரம் உயர்நிலேப் பள்ளிக்குச் சென்ருர். படிப்பில் முதலாவது மாணவனுக அஜீஸ் விளங்குவதை அங்கு நேரில் கண்டார்.

"இவனுடைய பெற்ருேர்கள் என் முழுப் பொறுப்பில் இந்த இளேஞனே விட்டுவிட்டால் நான் இவனே வளர்த்து ஆளாக்குவேன். இவன் கெட்டிக்காரனுக இருக்கிருன்; நம் சமூகத்தைச் சேர்ந்த பையனுகவும் இருக்கிருன். இவன் பி. ஏ. தேறியதும் என் பெண்ணேயும் இவனுக்குத் திருமணம் செய்து தரத் தயாராக உள்ளேன். இவனே ஒரு ஐ. சி. எஸ். அதிகாரியாகவே ஆக்கி விடுவேன். இந்த இளேஞனின் பெற்ருேர்கள் ஒப்புக் கொள்கிருர்களா? கேட்டுச் சொல் லுங்கள்" என்று ஷெரீப் தனது நண்பரிடம் தெரிவித்தார். அஜீஸ்—ஷெரீப் தொடர்பும், உறவும் இவ்வாறு ஆரம்ப மாயின.

அஜீஸ் சென்னே லயோலா கல்லூரியில் படித்துக்கொண் டிருந்தபோது ஒருமுறை, தலேவர் காமராஜ் அவர்களேக் கல்லூரி இலக்கிய மன்றத்திற்கு அழைக்க விரும்பினுர்.

கே. எம். ஷெரீப் அஜீஸைத் தலேவர் அவர்களிடம் அழைத்துச் சென்ருர். கல்லூரி மாணவர் கூட்டத்திற்கு மக்கள் தலேவர் போனுர். இளேஞர் அஜீஸ் தலேவரை வர வேற்றுப் பேசினுர்.

அதுதான் அஜீஸின் அரசியலுக்கு அடிப்படையாக அமைந்த கூட்டம். அந்தக் கூட்டத்தில் ஒரு புகைப்படம் எடுக்கப்பட்டது. அந்தப் புகைப்படத்தைத் தமது வீட்டில் கொடுத்த அஜீஸ், அண்ணனிடத்தில், "இன்று முதல் என் இலட்சியத் தலைவராகக் காமராஜ் அவர்களை ஏற்றுக் கொண்டு விட்டேன். இனி அவரே என் தலைவர்; அவரே என் வழிகாட்டி" என்று கூறினர்.

அஜீஸ் பி. ஏ. வகுப்பில் தேறியவுடன் ஷெரீப் நேராகத் தலைவர் காமராஜ் அவர்களிடம் சென்றார். தமது பெண்ணை அஜீஸுக்குக் கொடுக்க முடிவு செய்திருப்பதாகவும், தலைவரே அதை நேரில் வந்து நடத்தித் தர வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். தலைவர் நிர்ணயித்த தேதியில் திருமணம் நடைபெற்றது.

கும்பகோணம், மேலக் காவேரியில் உள்ள ஷெரீப் அவர்களது பங்களாவில், ஹிஜ்ரி 1376, துல் ஹஜ் பிறை 16 (14-7-1957) ஞாயிற்றுக் கிழமையன்று இரவு எஸ். என் ஏ. அஜீஸ்—மெய்தீன் பேகம் கல்யாணம் நடந்தது. தலைவர் காமராஜ், அமைச்சர்கள் கக்கன், ராமையா ஆகியோரும் பல காங்கிரஸ் பிரமுகர்களும், சட்ட மன்ற உறுப்பினர்களும் வந்திருந்தார்கள். மணமக்களை வாழ்த்தி திருப்பத்தூர் திரு. ராமமூர்த்தி அவர்கள் பேசினர். தஞ்சை ஜில்லாவே காணுத மாபெரும் வைபவமாக அந்தத் திருமணம் மிகவும் பிரமாதமாக நடைபெற்றது.

திருமணத்திற்குப் பின்பும் படிப்பு தொடர்ந்தது. அஜீஸ் சட்டக்கல்லூரியில் சேர்ந்து வழக்கறிஞர் பட்டம் பெற்றார்.

1964-ம் வருடம் ஏப்ரல் மாதத்தில் அஜீஸின் மனைவியார் தமது வீட்டு மேல் மாடியிலிருந்து தவறிக் கீழே விழுந்து அகால மரணமடைந்தார். நிம்மதியாக வாழ்ந்து வந்த ஷெரீப் குடும்பத்திற்கு அது முதலாவது பேரிடி. தமது அன்பு மகளை—சின்னஞ் சிறு வயது முதல் பாசத்தோடு தாம் வளர்த்த மகளை—இழந்த ஷெரீப் துயரக் கடலில் ஆழ்ந்தார்.

அந்தச் சமயத்தில் அஜீஸ் அருப்புக்கோட்டை பாராளு மன்ற இடைத் தேர்தல் பிரசாரத்துக்காகச் சென்றிருந்தார். விபத்து பற்றிய தந்தியைக் கண்டார். காரில் உடனடியாகக் கிளம்பி கும்பகோணம் சேர்ந்தார். மனைவியை இழந்த கண வரும், மகளை இழந்த தகப்பனாரும் ஒருவரையொருவர் சந்தித்த அந்தக் காட்சி எந்தக் கடினமான உள்ளம் உடைய வரையும் உலுக்கி விடும்! தாங்க இயலாத அந்த அதிர்ச்சியை அஜீஸும், ஷெரீப்பும் மிகச் சிரமத்துடன் பொறுமையாகத் தாங்கிக் கொண்டார்கள்.

முதல் மனைவியாரின் தங்கை ஜமீலா பீபியை அஜீஸ் மறுமணம் செய்து கொண்டார். முதல் மனைவியாருக்கு இரண்டு பெண் குழந்தைகள் உள்ளன. சென்ற ஆண்டு அஜீஸ் அமரரானபோது மும்தாஜுக்கு வயது ஏழு; ஷாத் தாஜுக்கு வயது ஐந்து. அந்தப் பிஞ்சுகள் இரண்டும் தாய் வழிப் பாட்டனாரான ஷெரீப் அவர்களது பொறுப்பிலேயே இப்போது உள்ளன.

## 4. காங்கிரஸ் காரியதரிசி

1959-ம் வருடம் இறுதியில் இளைஞர் குல இலட்சியத் தளபதி திரு. ஓ. வி. அளகேசன் அவர்கள் தமிழ்நாடு காங் கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போது அஜீஸ் தமிழ்நாடு மாணவர் காங்கிரஸ் அமைப்பாளராகப் பணி யாற்றிக் கொண்டிருந்தார். இளைஞர்களுக்குப் பொறுப்பு தரவேண்டும், அவர்கள் திறம்படச் செயலாற்றுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் என்ற கருத்துடைய திரு. அளகேசன் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் காரிய தரிசிகளாக திரு. ரா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களுடன் எஸ். என். ஏ. அஜீஸ், எஸ். எல். கிருஷ்ணமூர்த்தி ஆகிய இரண்டு இளைஞர்களையும் நியமிக்க விரும்பினர். தலைவர் காமராஜ் அவர்களின் அங்கீகாரம் உடனடியாகக் கிடைத் தது. அம்மூன்று பேர்களும் காரியதரிசிகளானார்கள்.

அஜீஸுக்கு அப்போது வயது இருபத்தைந்து. கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு, ஸ்தாபன ரீதியாகத் தமிழ்நாடு

மாணவர் காங்கிரஸ் மூலமாகத் தமிழகமெங்கும் மாணவர் களிடையே தேசிய உணர்ச்சியையும், நாட்டு வளர்ச்சிக்கான நல்ல கொள்கைகளையும் பரப்பிக் கொண்டிருந்தார்.

மாநில மாணவர் காங்கிரஸ் அமைப்பின் தலைமைப் பொறுப்பை அஜீஸ் ஏற்றுக்கொண்ட பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சென்னையில் உள்ள கல்லூரிகள், தமிழகம் எங்குமுள்ள முக்கியமான கல்லூரிகள் ஆகியவற்றிலிருந்த மாணவர்களோடு தொடர்பு கொண்டு, இரவு-பகல் ஓய்வு தேடாமல் பணியாற்றினார். அவருடைய அருமையான தொண்டின் காரணமாக, தேசிய இயக்கப் பணிகளில் பல மாணவர்கள் பங்கு கொள்ளத் தொடங்கினார்கள். தமிழக மெங்கும், ஒவ்வொரு ஊரிலும், பல இளம் பட்டதாரிகள் பொது வாழ்வுப் பணியில் ஈடுபட முன் வந்தார்கள்.

தமிழ்நாடு மாணவர் காங்கிரஸ் சார்பாக ஒவ்வொரு ஆண்டும் தலைவர் காமராஜ் அவர்களின் பிறந்த நாள் விழாவினை வெகு சிறப்பாகக் கொண்டாட அஜீஸ் ஏற்பாடு செய்தார். ஒவ்வொரு வருடமும் மாணவர் காங்கிரசின் மூலம் பல்வேறு மாவட்டங்களில் சமூக சேவை முகாம் களையும் அவர் நடத்துவார்.

மாணவர் காங்கிரஸ் அடிக்கடி பேச்சு—எழுத்துப் போட்டிகளையும், விளையாட்டுப் பந்தயங்களையும் கல்லூரி மாணவர்களிடையே நடத்தி ஊக்குவிப்பது வழக்கம். இதனால் பேச்சாற்றல் மிகுந்த இளைஞர்கள் பொது வாழ்வுப் பணிக்குக் கிடைத்தார்கள். மாணவர் காங்கிரஸ் மாவட்ட அளவில் பல மாநாடுகளையும் நடத்தியிருக்கிறது.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியாக அஜீஸ் பொறுப்பேற்ற பின்னர் பிரசாரப் பணிகளில் தீவிரமும், அக்கறையும் காட்டினார். தமிழகமெங்கும் பல பிரசாரச் சுற்றுப்பயணங்களுக்கு அவர் ஏற்பாடு செய்தார்.

அஜீஸுக்குச் சென்னையிலுள்ள தமிழ்நாடு காங்கிரஸ் அலுவலகமே சொந்த வீடாகியது. எந்நேரமும் அங்கேயே

இருப்பார். தம்மைத் தேடி வரும் ஊழியர்கள், இளைஞர்கள், மாணவர்கள் ஆகியோரிடம் அன்போடு உரையாடுவார். கட்சிப்பணிகளைப் பற்றி விவாதிப்பார்; இயக்க சம்பந்தமான ஆலோசனைகள் கூறுவார்.

அஜீஸ் ஒரு சிறந்த பேச்சாளர் என்பதைத் தமிழகம் அறியும். அவரே அடிக்கடி பிரசாரக் கூட்டங்களுக்கும் மாநாடுகளுக்கும் செல்வார். அவர் காரியதரிசியான பிறகு பல இடைத் தேர்தல்கள் நடைபெற்றன. ஒவ்வொன்றுக்கும் அவர் போகாமல் இருக்கமாட்டார். தேர்தல் வேலைகளில் ஈடுபடும்போது தமது சொந்த அலுவல்களில் செயல்படுவது போன்ற தீவிரத்துடன் பணியாற்றுவார்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் காந்தியடிகள் பிறந்த தின விழா, நேருஜி பிறந்த நாள், தலைவர் காமராஜ் பிறந்த தினம், பாரதியார் பிறந்த நாள் போன்ற விழாக்களை ஏற்பாடு செய்வதிலும் கருத்தரங்கு, கவியரங்கம், இலக்கியச் சொற்பொழிவு, ஊர்வலம் முதலியவற்றை நடத்துவதிலும் அவர் மிக்க ஆர்வத்தோடு பங்கு கொண்டார்.

1962-ம் ஆண்டு பொதுத் தேர்தலில் திரு. அளகேசன் அவர்கள் வெற்றி பெற்று, மத்திய அமைச்சராகப் பொறுப்பேற்றார். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் பொறுப்பினை திரு. ரா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களிடம் ஒப்படைத்தார். திரு. ரா. கி. அவர்கள் இன்றளவும் தொடர்ந்து தலைவராக இருந்து வருகிறார். 1963-ல் அவர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், அஜீஸைக் காரியதரிசியாக மீண்டும் நியமித்தார். இவ்வாறு இரண்டாவது முறையாக நியமனம் பெறுவது எளிதன்று. அஜீஸின் கடுமையான பணியின் காரணமாக இந்தக் கௌரவம் அவருக்குக் கிடைத்தது. அஜீஸ் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அங்கத்தினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## 5. இலக்கியத் தொடர்பு

இலக்கிய உலகோடு தொடர்பு கொள்ள வேண்டும் என்ற விருப்பம் அஜீஸுக்கு நீண்ட நாட்களாக உண்டு. எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், இலக்கிய விற்பன்னர்கள், கலைஞர்கள், இளம் வழக்கறிஞர்கள் முதலிய பிரிவினரோடு உறவுகொண்டு தேசிய அடிப்படையில் இணைந்து செயல்படவேண்டும் என்று அவர் கருதினர்.

இந்த விழுமிய கருத்துடன் 14—12—61–ந் தேதியன்று "சிந்தனையாளர் மன்றம்" என்ற அமைப்பைச் சில நண்பர்களுடன் சேர்ந்து உருவாக்கினர். அம்மன்றம் தொடங்கிய காலம் முதல் அஜீஸே அதற்குத் தலைவராக இருந்து வந்தார்.

சிந்தனையாளர் மன்றம் பல பணிகளைச் செய்து வருகிறது. 1962-ல் தேசிய ஒருமைப்பாடு பற்றிய ஒரு கருத்தரங்கினை அது நடத்தியது; 1963-ம் ஆண்டிலிருந்து, ஒவ்வொரு வருடமும் சாகித்திய அகாதெமியினரால் தமிழ் மொழியில் பரிசுக்கு உரியவராகத் தேர்ந்தெடுக்கப்படும் எழுத்தாளருக்குப் பாராட்டு விழா நடத்தி வருகிறது.

பல்வேறு துறைகளைச் சார்ந்த அறிஞர்களின் அரிய உரைகளைக் கொண்ட "மக்கள் தலைவர் காமராஜ்" என்ற சிறந்ததொரு தொகுப்பு நூலினையும், தலைவரவர்களைப் பற்றி இந்தியாவிலேயே முதன்முதலாக இந்தி மொழியில், "கர்மவீர் காமராஜ்" என்ற நூலினையும் சிந்தனையாளர் மன்றம் வெளியிட்டது.

நேருஜி அவர்கள் மறைந்ததும் அவரைப் பற்றி அறிஞர் பலர், பல்வேறு கோணங்களிலிருந்து ஆய்வுரை நிகழ்த்திட இம்மன்றம் ஏற்பாடு செய்தது. 3-8-64-ந் தேதியன்று, தலைவர் காமராஜ் அவர்கள் தலைமை தாங்க, மத்திய அமைச்சர் திரு. சஞ்சீவ ரெட்டி அவர்கள் நேருஜி நினைவுச் சொற்பொழிவுகளைத் தொடங்கி வைத்தார்கள். "நேருஜி நினைவுச் சொற்பொழிவுகள்" என்ற தலைப்பில் அரியதொரு நூலாக வெளிவந்துள்ள அது, அமரர் அஜீஸ் அவர்களின் நினைவுக்குச் சமர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது.

அஜீஸ் சிறந்த எழுத்தாளர். அவர் மாணவராக இருந்த போதே சில நண்பர்களுடன் சேர்ந்து, "வீர முழக்கம்" என்ற பத்திரிகையைத் தொடங்கிச் சிறிது காலம் நடத்தினர். பின்னர் "சிந்தனை" என்ற சீரிய ஏடும் அவரால் நடத்தப்பட்டது. அஜீஸ் அவ்வப்போது பல நாளிதழ்களிலும், ஏடுகளிலும் பலமுறை எழுதியிருக்கிறார். தரக் குறைவு இல்லாத வகையில் கருத்தை வெளியிட வேண்டும் என்று அவர் திடமாக நம்பினர்.

அஜீஸ் சிறந்த இலக்கியப் பேச்சாளராகவும் திகழ்ந்தார். பாரதியாரிடம் அவருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. தமது பேச்சினிடையே அடிக்கடி பாரதியாரின் பாடல்களை அவர் பயன்படுத்துவார். அகில இந்திய ரேடியோவிலும் அவர் பலமுறை பேசியிருக்கிறார்.

## 6. அமெரிக்கப் பயணம்

1964-ம் வருடம் மார்ச் மாதத்தில் அஜீஸ் தலைமையில் ஒரு பிரசாரக் குழுவினர் அந்தமான் தீவுகளுக்குச் சென்றார்கள். திருவாளர்கள் திருப்பூர் வின்சென்ட், ஆர். ஜெபமணி, திருப்பத்தூர் ராமமூர்த்தி, பி. ஆர். லட்சுமி காந்தன் ஆகியோர் அக்குழுவில் சென்றார்கள். அக்குழுவினர் அந்தமான் தீவுகளில் பல மாபெரும் கூட்டங்களில் சிறப்பாகப் பிரசாரம் செய்துவிட்டுத் திரும்பினர்கள்.

தமிழகத்தில் மளமளவென்று வளர்ந்து வந்த இந்த இளம் தலைவரை அமெரிக்கா கண்டுகொண்டது. அமெரிக்கா முழுவதும் இரண்டு மாத காலம் சுற்றுப்பயணம் செய்ய வருமாறு, தலைவர்கள் பரிவர்த்தனை திட்டத்தின் கீழ், அமெரிக்க அரசாங்கம் அஜீஸுக்கு அழைப்பு விடுத்தது. அஜீஸ் அதை ஏற்றுக்கொண்டார்.

11-4-65-ந் தேதியன்று சென்னையில் பல்வேறு துறைகளையும், ஸ்தாபனங்களையும் சேர்ந்த பலர் ஒன்றுகூடி அமெரிக்கச் சுற்றுப்பயணம் மேற்கொள்ள விருந்த அஜீஸுக்

குத் தேநீர் விருந்தளித்தார்கள். டாக்டர் சி. பி. ராமசாமி அய்யர் அவர்கள் வழியனுப்பு உரை நிகழ்த்தினர். அமெரிக்க கான்சல்ஜெனரல் டாக்டர் பி. பிராங்க்ளின் அவர்கள் பின்னர் பேசினர்.

திருப்பூர் வின்சென்ட் அவர்கள் அஜீஸுக்குத் தமது இல்லத்தில் விருந்தளித்தார். மாம்பலம் பாரதி மன்றம் தேநீர் விருந்து கொடுத்தது.

16-4-65-ந் தேதியன்று மாலே அஜீஸ் வழியனுப்புக் கூட்டம் சத்தியமூர்த்தி பவன் திடலில் நடைபெற்றது. த. நா. கா. க. தலேவர் திரு. ரா. கி. அவர்கள் தலேமையில் தலேவர் காமராஜ், திருவாளர்கள் ஈ. வெ. கி. சம்பத், டாக்டர் பா. நடராஜன், அகிலன், எஸ். ஜி. விநாயகமூர்த்தி, திருப்பூர் வின் செ ன் ட், கொத்தமங்கலம் சுப்பு, கே. ராமதாஸ், டி. அப்துல் வாஹீத் எம்.பி., டி. பார்த்த சாரதி, ஜி. மாசிலாமணி, தாயுமானவர் ஆகியோர் பேசினர். தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் அஜீஸுக்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தார். 17-ம் தேதி பகல் அமைச்சர் திரு. பூவராகன் அவர்களது இல்லத்தில் அஜீஸுக்கு விருந்து.

17-ந் தேதி மாலே 5-40 மணிக்கு மீனம்பாக்கத்திலிருந்து விமானத்தின் மூலம் அஜீஸ் தமது சுற்றுப்பயணத்தைத் தொடங்கினர்.

அமெரிக்காவில் பல கல்வி ஸ்தாபனங்கள், பல்கலேக் கழகங்கள், கூட்டுறவு அமைப்புகள், விவசாயப் பண்ணேகள், சட்டசபைகள், தொழிற்சாலேகள் முதலியவற்றுக்கு அஜீஸ் நேரில் சென்று பல விஷயங்களேக் கண்டறிந்தார். பல அரசியல் தலேவர்களேயும், அறிஞர்களேயும் சந்தித்துப் பேசினர்.

அமெரிக்காவில் அஜீஸை அறிமுகப்படுத்தும் போது "இந்தியாவிலிருந்து அஜீஸ்; காமராஜின் சீடர்களில் ஒருவர்" என்று கூறுவார்கள். அவ்வாறு அறிமுகம் ஆகியதில் அவருக்குப் பரம திருப்தி.

அமெரிக்காவில் பல இடங்களில் அஜீஸ் உரை நிகழ்த்தினர். அமெரிக்கப் பயணம் எல்லா வகையிலும் அவருக்குப் பயன் தருவதாக அமைந்துவிட்டது. "அமெரிக்காவுக்குப் போனபோது நான் ஒரு கன்சர்வேடிவாக இருந்தேன். அங்கிருந்து ஒரு லிபரலாகத் திரும்பினேன்" என்ருர் அவர்.

## 7. விளக்கு அணைந்தது

அணைகின்ற விளக்கு பிரகாசமாக எரியும் என்பார்கள். அஜீஸைப் பற்றிப் பல ஏடுகள் எழுதத் தொடங்கின. அவருடைய புகழ் உச்ச நிலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. ஸ்தாபன ரீதியாக அவரது பெருமை வளர்ந்து கொண்டே போயிற்று. அவருக்கு ஒளிமயமான எதிர்காலம் நிச்சயமாக உண்டு என்று அனைவரும் கருதினர். அந்த வேளையில்தான் காலன் அவரை அணுகினன்.

17-9-65-ந் தேதியன்று காலை சென்னையிலிருந்து ஒரு காரில் திரு. ரா. கி. அவர்களுடன் அஜீஸ் கடலூர் சென்ருர். அங்கிருந்து திருச்சிக்குப் போய் மறுநாள் நடைபெற்ற காரியக் கமிட்டியில் கலந்து கொண்டார். விதி அஜீஸைத் தன்வழி இழுத்துச் சென்றது. சென்னைக்கு நேராகத் திரும்பாமல் அமைச்சர் திரு. மஜீத் அவர்களுடன் வேலூருக்குப்போனர். அங்கு தேசப் பாதுகாப்பு நிகழ்ச்சியொன்றில் கலந்து கொண்டார்.

19-ந் தேதி காலை அவர்களது கார் வேலூரிலிருந்து சென்னை நோக்கிப் புறப்பட்டது. வழியில் காலை 9-15-க்கு லாரி ஒன்று அந்தக் காரில் மோத, பயங்கர விபத்து ஏற்பட்டது. ஆபத்தான நிலைமையில் அஜீஸ் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். விபத்தின்போது இழந்த நினைவு அவருக்கு மீண்டும் திரும்பவேயில்லை.

21-9-65-ந் தேதியன்று காலை 5 மணிக்கு அஜீஸ் அமரரானர்.

அவரது உடல் த. நா. கா. க. 'வேன்' மூலம் கும்பகோணத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் திரு. ரா. கி. அமைச்சர் திரு. பூவராகன், பாண்டிச்சேரி முதலமைச்சர் திரு. வெங்கடசுப்பா ரெட்டியார், அமைச்சர் திரு. வரதப்பிள்ளை, சபாநாயகர் திரு. பருக் மரைக்காயர், தமிழ்நாடு காங்கிரஸ் காரியதரிசி திரு. கே. பி. வி. கிரி, தியாகி டி. எஸ். அருணாசலம், கே. ராஜாராம் நாயுடு, தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. கருப்பையா மூப்பனார் ஆகியோரும் தமிழகத்தின் பல பாகங்களிலிருந்து வந்த அன்பர்களும் அங்கே குழுமினார்கள்.

அஜீஸின் சவ ஊர்வலத்தில் காங்கிரஸ், கம்யூனிஸ்ட், தி. மு. க., திராவிடர் கழகம், தமிழரசுக் கழகம் முதலிய கட்சிகளைச் சார்ந்தவர்கள் கலந்துகொண்டு அந்த இளந் தலைவருக்கு மரியாதை செலுத்தினார்கள். பாதையில் பல அன்பர்கள் மலர் தூவினார்கள்; ஆயிரக்கணக்கான மாலைகள் போடப்பட்டன.

அஞ்சலிக் கூட்டத்தில் திரு. ரா. கி. அவர்கள் பேச முடியாமல் விக்கி விக்கி அழுதார். அமைச்சர் திரு. பூவராகன் பேச இயலாமல் மயக்கமடைந்து விட்டார். ஜில்லா போலீஸ் அதிகாரி திரு. ஆதித்தன் மிக உருக்கமாகப் பேசிய போது எல்லோரும் அழுதுவிட்டார்கள். அஞ்சலி உரைகளுக்குப் பிறகு, ஓராண்டுக்கு முன்னர் அஜீஸின் மனைவியார் மெய்தீன் பேகம் அடக்கம் செய்யப்பட்ட இடத்திற்குப் பக்கத்திலேயே, அஜீஸும் அடக்கம் செய்யப்பட்டார்.

நாடெங்கும் பல அனுதாபக் கூட்டங்கள் நடந்தன. பல மன்றங்கள் அனுதாபத் தீர்மானங்கள் நிறைவேற்றின.

ஆனந்த விகடன், தமிழ்ச்செய்தி, விடுதலை, இந்திய தூதன், யுகப் புரட்சி, தெய்வம், காங்கிரஸ் ஊழியன், குடியரசு, சிவாஜி, தமிழ்மலர், நாத்திகம், The Comrade முதலிய ஏடுகள், இழப்பு குறித்து வருந்தி எழுதின.

சென்னை மாநகராட்சியில் ஏகமனதாக நிறைவேறிய அனுதாபத் தீர்மானத்தை முன்மொழிந்த திரு. எஸ். ஜி.

விநாயகமூர்த்தி அவர்களின் உணர்ச்சி மிக்க உரை கீழே தரப்பட்டுள்ளது:

“மேயர் அவர்களே! இந்தத் தீர்மானத்தை முன் மொழியும் போது என்னுடைய உணர்ச்சிகளையெல்லாம் வேதனையோடு காத்துக்கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன். காரணம், நண்பர் அஜீஸ் அவர்கள் என்னோடு பல ஆண்டுகளாக நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். அவர்கள் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியென்னும் மாநில ஸ்தாபனத்தின் பொறுப்புள்ள செயலாளராக யிருந்தாலும் கூட இன்னும் பல்வேறு பொதுத் துறைப் பணிகளிலும் ஈடுபட்டிருந்தார்கள் என்பதை இந்நேரத்தில் நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

“கலைத் துறையிலும், இலக்கியத் துறையிலும் அவர்கள் மிகுந்த ஆர்வத்தையும் அக்கரையையும் காட்டி வந்துள்ளார்கள் என்பதை அவருடைய வாழ்க்கை நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிறது. “சிந்தனையாளர் மன்றம்” என்னும் நிறுவனத்தை அரசியல் கட்சிகளுக்கு அப்பால் நிறுவி அதைச் சிறந்த முறையில் நிர்வகித்து வந்திருக்கிறார்கள். இன்னும் ஜனநாயக சோஷலிச மன்றம், என்னும் நிறுவனத்திற்குக் கூடத் தலைவராகயிருந்து காரியங்களைத் திறம்பட ஆற்றி வந்துள்ளார்கள்.

“இதற்கு இடையில் நான் அவரை அறிந்த வரையில் வயதில் இளைஞராக யிருந்தாலும் கூட அரசியலில் எந்த அளவுக்கு நாம் தூய்மையை எதிர்பார்க்க முடியுமோ, பொதுத்துறையில் எந்த அளவுக்கு ஒழுக்கத்தை எதிர் பார்க்க முடியுமோ, அத்தனையும் குடிகொண்டவராக, மற்றவர்களுக்கு முன்மாதிரியாக அவர்கள் வாழ்ந்து வந்தார்கள்.

“அந்த அளவுக்கு அரசியலில் அப்பழுக்கற்ற நிலைமையில், பற்றற்ற துறவியைப்போல், எங்கள் கட்சித் தலைவர் சொன்னதுபோல் அவர்கள் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். அத்தகைய இளைஞர், இதுவரையில்

எத்தனையோ இளைஞர்களுக்கு வழிகாட்டியாக இருந்தவர், வருங்காலத்தில் ஒரு சிறந்த தலைவராக ஆகவேண்டுமென்று கற்பனை செய்து கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் அவருடைய அகால மரணம் ஏமாற்றத்தைக் கொடுத்துவிட்டது.

"அவருடைய ஆன்மா சாந்தியடைய நான் பிரார்த்தனை செய்கிறேன். அவருடைய மறைவால் வாடும் அவரது குடும்பத்திற்கு நம்முடைய ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ள வேண்டுமென்று, என் கட்சியின் சார்பில் தெரிவித்துக் கொள்கிறேன்.

## 8. இதயங்களில் வாழ்கிறார்

எளிமை, இனிமை, அடக்கம் ஆகியவற்றுக்கு அஜீஸ் இலக்கணமாகத் திகழ்ந்தார். பொதுவாழ்வில் நேர்மை அவசியம் என்று கூறி, அதன்படி அவர் வாழ்ந்து காட்டினார்.

பழகுவதற்கு இனிய நண்பர்; காங்கிரசே வாழ்க்கை எனக் கருதிக் காலமெல்லாம் உழைத்த உத்தமத் தொண்டர்; மாணவர் உலகில் செம்மையான பாதையை வகுத்த வழிகாட்டி; அறிவும் ஆற்றலும் நிரம்பிய செயல் வீரர்; தலைவர் காமராஜ் அவர்களையே தமது மனச்சான்றாகக் கொண்டு வாழ்ந்த மாசற்ற மாணிக்கம் அஜீஸ்.

நவீன காலத்தில் நாகரிகம் என்ற பெயரில் நடைபெறுகின்ற வீண் ஆரவாரங்களையும், ஒழுக்கக் கேடுகளையும் அவர் அழுத்தந் திருத்தமாக எதிர்த்தவர். இளைஞர்கள் கட்டுப்பாட்டில் வளர வேண்டும், நல்ல பண்புகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது அவரது போதனை. இளைஞர்கள் ஒழுக்கம் என்னும் ஒற்றையடிப் பாதையிலிருந்து விலகிச் செல்லலாகாது என்று அவர் வலியுறுத்துவார்.

இளம் வயதில் வியக்கத்தக்க செல்வாக்கு அவருக்கு ஏற்பட்டது. அதனைத் துளிக்கூடத் தமக்காகப் பயன்படுத்திக் கொள்ள அவர் முயன்றது இல்லை. அந்தப் பண்பு அரசியலில் மிகவும் அபூர்வம். தன்னல மறுப்பே அவரது கோட்பாடு.

இளம் வயதில் அஜீஸைப்போல, குடும்பம் என்ற நினைவே இல்லாமல், இயக்கமே கதியென்று தொண்டாற்றும் மனப்பக்குவம் உள்ளவர்கள் இலட்சத்தில் ஒருவரேனும் இலர் என்று துணிந்து கூறலாம்.

அஜீஸ் மதத்தால் இஸ்லாமியர்; ஆனால் அவருடன் பழகும் எவருக்கும், அவர் ஒரு முஸ்லிம் என்ற எண்ணமே எழாது. குறுகிய எல்லைகளைக் கடந்து, இராமலிங்க அடிகளாரைப் போன்ற மனோபாவத்துடன் அவர் வாழ்ந்தார்.

இந்து மதத் தத்துவங்களில் அவர் ஆழ்ந்த அக்கறை கொண்டு நிறையப் படிப்பது உண்டு. 'நான் தெய்வ பக்தி உடையவன்' என்று அவர் அடிக்கடி சொல்லிக்கொள்ளு வார். அவருடைய கடவுள் பக்தி ஒழுக்கத்தினை அடிப்படையாகக் கொண்டது.

அரசியல், பொருளாதாரம், தத்துவம், வரலாறு போன்ற துறைகளையொட்டிய நூல்களை அவர் நிறையப் படிப்பார். எங்கேனும் நல்ல புத்தகத்தைப் பார்த்துவிட்டால் உடனடியாக அதை வாங்கிப் படித்து விடுவார்.

தமது சொந்தச் சாமான்களைக்கூடச் சரிவர வைத்துக் கொள்ள அவருக்குத் தெரியாது. இதனைத் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் திரு. ரா. கி. அவர்கள், ஒரு தந்தை மகனைக் கண்டிப்பதுபோல, அடிக்கடி சுட்டிக் காட்டுவது வழக்கம்.

அஜீஸ் திரைப்படங்களுக்குப் போகமாட்டார். மிகச் சாதாரணம் என்று கருதப்படுகின்ற கெட்ட குணங்களும் அவரிடத்தில் இருந்தது இல்லை.

நல்லவர்கள் நெஞ்சங்களில் அஜீஸ் என்ற தூய்மையாளர் என்றென்றும் நிரந்தரமாக இருப்பார்.

# அமரர் அஜீஸ்

---

## உதாரண இளைஞர்

### கே. காமராஜ்

பொது வாழ்க்கையில் ஈடுபட்டு நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றும் பணியை மேற்கொள்ள இளைஞர்கள் முன் வருவது சற்று அசாதாரணமான காரியம்தான். விடுதலைப் போரில் அவர்கள் வீராவேசத்தோடு கலந்துகொண்டார் கள். அதற்குக் காரணம் அவர்களது இளமைத் துடிப்பும், உணர்ச்சி வேகமும் ஆகும். தீரமிக்க செயல்கள் செய்வதற்கு விடுதலைப் போராட்டம் நல்ல வாய்ப்புகளைக் கொடுத்தது. ஆகவே அதில் அவர்கள் உற்சாகத்தோடு கலந்துகொண்டது இயற்கையாகும். ஆனால் நாட்டின் விடுதலைக்குப் பிறகு, பொதுப் பணிகளில் ஈடுபடுவதற்கு அமைதியான போக்கும், பொறுமையும் தேவைப்பட்டன. அப்படியே ஈடுபட்டாலும் நீடித்து அதிலேயே இருக்கப் பல இளைஞர்களால்முடியவில்லை. ஆகவே அவர்கள் பொதுப்பணி செய்வதிலிருந்து தம்மை விடு வித்துக் கொண்டனர். சிலர்தான் தொடர்ந்து பொதுப் பணி ஆற்றுவதில் ஈடுபட்டனர். வாழ்க்கையில் முன்னேறு வதற்குப் பல வாய்ப்பு வசதிகள் இருந்தும், அவைகளைப்பற்றி சிந்திக்காமல், சில இளைஞர்களால் மட்டும்தான் பொது சேவைக்கென்றே தங்களை அர்ப்பணித்துக் கொள்ள முடிந்தது.

அந்த இளைஞர்களுள் ஒருவர்தான், திரு. அஜீஸ் என்று சொன்னால், அது அவருடைய சேவையைக் குறைத்து மதிப்பிட்டதாகும். ஏனென்றால் இளைஞர்களுக்கு மத்தியில் தலைவராகவும், தலைவர்களுக்கு மத்தியில் ஆர்வம் மிக்க இளைஞராகவும் அவர் திகழ்ந்தார்.

மாணவர்கள் மத்தியில் தேசபக்தியை வளர்த்து, நாட்டுக்கு அவர்கள் ஆற்ற வேண்டிய கடமையை உணர்த்தி, புதியதொரு சமுதாயத்தை உருவாக்கும் பணியில் அவர்களை ஈடுபடுத்தும் நோக்கத்தோடு மாணவர் காங்கிரஸை உருவாக்குவதற்காக திரு. அஜீஸ் அரும்பாடுபட்டு வெற்றி கண்டார்.

மாணவராக இருந்தபொழுதே மக்களுக்கு நன்கு அறிமுகமானவர் அஜீஸ். அதற்குக் காரணம் அவருடைய பொது நல சேவையாகும். படிப்பு முடிந்ததும், அஜீஸ் பொதுப் பணியில் ஈடுபடுவார் என்று சொல்லும் அளவுக்கு மாணவப் பருவத்தின்போதே அவர் தன்னைப் பொது வாழ்க்கையோடு இணைத்துக்கொண்டு விட்டார். மாணவர்களின் கடமை கசடறக் கற்பதாகும். அந்தக் கடமையிலும் அவர் தவறவில்லை. கல்வியும் பொது நல சேவையும் ஒன்றோடொன்று குறுக்கிடாதபடி இருந்ததால் இரண்டிலுமே அவரால் வெற்றியோடு விளங்க முடிந்தது. படிப்பு முடிந்ததும், அனைவரும் எதிர்பார்த்ததுபோல், காங்கிரஸ் கட்சிப் பணியையே அவர் தமது முழுநேர வேலையாக ஏற்றுக்கொண்டார்.

இளைஞராகிய அவர் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது, கட்சியானது அவருடைய திறமையை அங்கீகரித்ததின் அத்தாட்சியாகும். காங்கிரஸ் இயக்கத்தின் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் அவருக்கு பலமான நம்பிக்கை இருந்தது. அதே போல் அவரது உழைப்பிலும், விடா முயற்சியிலும் கட்சித் தலைவர்களும், சக ஊழியர்களும் அசைக்க முடியாத

நம்பிக்கை கொண்டிருந்தார்கள். பரஸ்பரம் ஏற்பட்ட இந்த நம்பிக்கையை அடித்தளமாகக் கொண்டு, வருங்காலத்திய தலைவர்களுள் ஒருவராகத் திகழ்வதற்கான அம்சங்களோடு அவர் வளர்ந்து வந்தார்.

பொது வாழ்க்கைக்குத் தேவையான அடக்கம் என்னும் பண்பு அவரிடத்தில் விசேஷமாக இருந்தது: யாரும் அதைக் கவனிக்கத் தவறமாட்டார்கள். சொல்லிலும், தோற்றத்திலும் எளிமையானவராகவே இருப்பார். எல்லாரிடமும் நன்ருகக் கலந்து பேசுவார். நீண்ட சொற்பொழிவாற்றும் ஆற்றல் உள்ளவர். இவ்வளவும் ஒரு அரசியல் வாதிக்கு— பொது வாழ்க்கையில் ஈடுபட்டவருக்குத் தேவையான குணாதிசயங்கள் என்ருலும், இந்த அம்சங்கள் எல்லாம் அஜீஸிடத்தில் அவர் இளைஞுக இருக்கும்பொழுதே காணப்பட்டதுதான் பாராட்டுவதற்குரியதாகும்.

திரு. அஜீஸ் அவர்கள் இதுவரை ஆற்றிய பொதுச் சேவையை விட அவர், தம்முடைய திறமை, ஊக்கம், உற்சாகம் ஆகியவற்ருல், காங்கிரஸ் கட்சிக்கும், நாட்டுக்கும் இன்னும் பல பயனுள்ள காரியங்களைச் செய்திருப்பார் என்று நாம் நன்ருக அறிகிரும்.

ஒரு கட்சிக்கு, ஒரு ஒப்பற்ற தலைவன் கிடைப்பது கடினம். அதே போல் அஜீஸ் அவர்களைப் போன்ற உண்மையான ஊழியர்கள்—உற்சாகம் மிகுந்த இளைஞர்கள் கிடைப்பதும் கடினம்.

உண்மையான ஊழியர்களின் நினைவை என்றும் மறவாமல் போற்றி கௌரவிக்கும் காங்கிரஸ் கட்சி, அஜீஸ் அவர்களின் சேவையையும், உழைப்பையும் எந்நாளும் மறவாது.

# சிறந்த தொண்டர்

## பி. கக்கன்

நமது நாட்டின் சுதந்திரப்போராட்டத்தில்பெரியவர்கள் பங்கு கொண்டு தங்கள் கடமையைச் செய்தபோது மாணவர் களும் கலந்துகொண்டு பாடுபட்டார்கள். அதன் காரண மாகப் பல மாணவர்கள் நாட்டிற்குத்தங்கள் இன்னுயிரையும் ஈந்து அழியாப் புகழ் பெற்றூர்கள்.

பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாக்கப் பாடுபட்ட, பாடு பட்டு வருகின்ற தேசிய உள்ளம் படைத்த மாணவர்களில் திரு. அஜீஸ் அவர்களும் ஒருவராவார். கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போதே இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் பெருமையையும் அருமையையும் உணர்ந்த இளைஞர் திரு. அஜீஸ் அவர்களுடைய உண்மையான பணி, இன்று இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் தலைவராக விளங்கும் மக்கள் தலைவர் உயர்திரு. காமராஜ் அவர்களை மிகவும் கவர்ந்தது.

திரு. அஜீஸ் அவர்கள் மாணவர்கள் மத்தியிலே அயராது உழைத்து, தமிழகத்தில் உள்ள மாணவர்களை ஒருங்கே இணைத்து, அவர்களிடத்தே தேச பக்தியையும் ஒருமைப் பாட்டையும் வளர்க்க அல்லும் பகலும் பாடுபட்டு, அதில் ஓர் அளவு வெற்றியும் கண்டார் என்று சொன்னுல் மிகை யாகாது.

அதில் வெற்றி கண்ட வீர இளைஞனை, தமிழ்நாடு காங் கிரஸ் கமிட்டியின் காரியதரிசியாக, அன்றைய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவரான திரு. ஒ. வி. அளகேசன் அவர்கள் தலைமையில் பணியாற்றச் செய்ய எண்ணங் கொண்டார் மக்கள் தலைவர் காமராஜ் அவர்கள்.

காரியதரிசி என்ற முறையில் பணி செய்து தமிழ்நாட் டின் பல இடங்களுக்கும் சென்று சிறந்த சொற்பொழிவுகள்

ஆற்றி மாணவர்களே, விசேஷமாகப் பல இளைஞர்களைத் தேச பக்தி உள்ளவர்களாக ஆக்கினர்.

அவருடைய அயராத உழைப்பின் காரணமாக மீண்டும் அவர் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியாக உயர்திரு. ரா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களின் சீரிய தலைமையின் கீழ் பணியாற்றி வந்தார்.

ஸ்தாபனத்தின் முன்னேற்றத்துக்காக அயராது பாடு பட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில் திரு. அஜீஸ் அவர்கள் பல சோதனைகளுக்கு உள்ளானர். சேலம் மாவட்டம் திருச்செங்கோடு பாராளுமன்றத் தொகுதி உபதேர்தலின்போது கிராமம் கிராமமாகச் சென்று கொண்டிருக்கும்போது ராசிபுரம் என்னும் ஊரில் ஒருநாள் இரவு கிணற்றில் தவறி விழுந்து காலில் முறிவு ஏற்பட்டு பற்கள் உடைபட்டு ஆபத்திலிருந்து தெய்வாதீனமாக உயிர் தப்பினர்.

இப்பெரும் ஆபத்திலிருந்து தப்பி மீண்டும் பணி செய்யத் தொடங்கியவுடன் அருப்புக்கோட்டை பாராளுமன்றத் தொகுதி உப தேர்தல் நடந்தது. இத்தேர்தலிலும் வழக்கம் போல திரு. அஜீஸ் அவர்கள் பல கிராமங்களுக்குச் சென்று தீவிரப் பிரசாரம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் இன்னொரு பேரிடி அவருக்கு ஏற்பட்டது. தன்னுடைய வாழ்க்கைத் துணைவியார் வீட்டு மாடியிலிருந்து தவறி விழுந்து அகால மரணமடைந்த செய்தி அங்கு அவருக்குக் கிடைத்தது. உடல், பொருள், ஆவி அத்தனையையும் நாட்டிற்காகவே தத்தம் செய்திருந்த காரணத்தால் துயரத்தை மனத்தில் இருத்தி மீண்டும் காங்கிரஸ் மகாசபையின் அலுவல்களைக் கவனிப்பதில் ஈடுபட்டார்.

நமது நாடு மீண்டும் சோதனைக்குள்ளாவதை அறிந்த அவர் நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்காக அதிக அக்கறை எடுத்துப் பணி செய்ய வேண்டும் என்று எண்ணி பிரசார வேலைகளை முடுக்குவதில் ஈடுபட்டார். தேசியப் பாதுகாப்பு நிதிக்கு மக்கள் அதிக அளவில் உதவி செய்ய

ஊக்குவிக்க வேண்டும் என்ற எண்ணம் அவர் மனத்தில் குடி கொண்டிருந்தது.

18-9-65 அன்று திருச்சியில் நடந்த தமிழ்நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டியின் விசேஷக் கூட்டத்தில் கலந்துகொண்டு விட்டுச் சென்னைக்குத் திரும்பத் திட்டமிட்டிருந்த அவர், தேசீயப் பாதுகாப்பு நிதி சேர்க்கும்பொருட்டு வேலூரில் நடிகர் திலகம் திரு. சிவாஜி கணேசன் அவர்கள் நடித்த நாடகத்தில் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் கனம் மஜீத் அவர் களுடன் சென்று கலந்துகொண்டுவிட்டு மறுநாள் காலை அமைச்சர் அவர்களுடன் சென்னைக்குத் திரும்பிக்கொண் டிருக்கும் சமயத்தில் அவர்களுடைய கார் விபத்திற்குள்ளா கியது. தலையில் பலத்த அடிபட்டு நினைவற்றிருந்த திரு. அஜீஸ் அவர்களையும் மற்றவர்களையும் சென்னை சர்க்கார் பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வந்து சேர்த்து சிகிச்சை கொடுக்கப்பட்டது. திரு. அஜீஸ் அவர்களின் உயிரைக் காப் பாற்ற டாக்டர்கள் தீவிரப் பிரயத்தனம் செய்தும் பலிக்காது போய்விட்டது. அவர் உயிர் பிரிந்து ஆண்டவன் அடி சேர்ந் தார்.

நம்மை விட்டு திரு. அஜீஸ் அவர்கள் பிரிந்துவிட்டாலும் அவரது பணி நம்மைவிட்டுப் பிரியவில்லை. அவருடைய சிறந்த சேவையை இளைஞர்கள், குறிப்பாக மாணவர்கள் மனத்தில்கொண்டு அயராது பணி செய்வதே நாம்அவருக்குச் செலுத்தும் அஞ்சலியாகும். ஜெய்ஹிந்த்.

## விண்ணுலகில்

### தவத்திரு குன்றக்குடி அடிகளார்

இடம்: ஒன்று பரம்பொருளின் சந்நிதி.

பாத்திரங்கள்: ஒன்று பரம்பொருள்; அஜீஸ், அவரைச் சிறைப்பிடித்த கூற்றுவன், உடந்தையாக இருந்த சரக் குந்து ஒட்டி.

அஜீஸ் : (நிலந்தொட உடலால் வணங்கி) வணக்கம்.

பரம் : வருக! இன்ப அன்பனே வருக. நின்வரவு நல்வர வாகுக. நின் வரவால் இவ்விண்ணுலகில் வாழும் பலரும் மகிழுகின்றார்கள்.

அஜீஸ் : விண்ணுலகில் பலர் மகிழலாம்; என் மனத்தில் மகிழ்ச்சியில்லையே.

பரம் : ஏனப்படிச் சொல்லுகிறாய்? விண்ணுலகிற்கு வர வேண்டும் என்று மண்ணக மக்கள் பலரும் விரும்புகிறார் கள். அதற்காக எனது கதவைப் பலர் தட்டிக்கொண் டிருக்கிறார்கள். நீ சொல்லுவது விந்தையாக இருக் கிறது.

அஜீஸ் : உண்மைதான். விண்ணுலகில் சேவைக்கு இட மேது? எங்கள் தேசப்பிதா காந்தியடிகள், 'மோட்ச லோகத்தில் சேவைக்கு மார்க்கமில்லாததால், நான் நரகத்தில் இருந்தாலும் பரவாயில்லை—சேவை செய் வதையே விரும்புகிறேன்' என்று கூறியிருக்கிறார். நாங்கள் அதைத் தாரக மந்திரமாகக் கருதுகிறோம்.

பரம் : அப்படியா? இருக்கட்டுமே! அப்படிக் கூறிய காந்தி யடிகளும் இப்போது இங்குதானே இருக்கிறார்.

அஜீஸ் : ஆம். துர்ப்பாக்கிய வசமாக நிர்ப்பந்தத்தின்மூலம் அவர் இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறார். அவர் விண்ணுலகை விரும்பியா வந்தார்? ஆனாலும் ஓர் ஆறுதல். அவர் தாம் எடுத்துக்கொண்ட இலட்சியத்தை நிறைவேற்றிய பிறகு இங்கு கொண்டு வரப்பட்டார்.

பரம் : அப்படி என்ன இலட்சியம்?

அஜீஸ் : 'விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்ட பாரதத்' திற்கு விடுதலை பெற்றுத் தந்தார். பஞ்சைகளாக— பராரிகளாக வாழ்ந்த பாரத மக்களைத் தன்மானமுடை யவர்களாக வாழச் செய்தார். இந்து என்றும், முஸ்லிம் என்றும், பார்ப்பனர் என்றும், பறையர் என்றும் வேறு

பட்டுப் பிரிவுப் பட்டுக் கிடந்த பாரத சமுதாயத்தை உணர்வினுலும், வாழ்க்கைப் போக்காலும் ஒரு நாட்டு மக்களாக்கினுர்—ஒரு குல மக்களாக்கினுர். இது மறக்க முடியாத சாதனை. ஏன்? குருதி குடிக்கும் போரே போரெனக் கருதியிருந்த மக்கள் மன்றத்தில் அறநெறிப் போரை அறிமுகப்படுத்தினுர். இன்னும் எத்தனை எத்தனையோ எண்ணருஞ் சாதனைகள்! அவற்றையெல்லாம் எழுத ஏடடங்கா. என் கதை அப்படியல்ல. அண்ணல் காந்தியடிகள் எனது மூத்த தலைமுறை. நான் அடுத்த தலைமுறை. அவர் சுதந்திரப் போராட்டத் தலைமுறையைச் சார்ந்தவர். நானே இன வகுப்பு வாதமற்ற ஒரு சுதந்திர சோஷலிச சமுதாயத்தைச் சமைக்கும் பணியில் ஈடுபட்டவன். என்னுடைய இலட்சியம் இன்னும் முடியவில்லை. எனக்கு வேலை இன்னும் பாக்கியிருக்கிறது. தயவுசெய்து என்னை மீண்டும் எனது தாயகத்திற்கே அனுப்பி விடுங்கள்.

பரம்: ஏனப்பா அலட்டிக் கொள்கிருய்? உன்னுடைய அருமை மனைவி கூட இங்குதானே இருக்கிருள். நீ இங்கேயே சுகமாக வாழலாம். காமதேனுவும், கற்பகத் தருவும் இங்கே இருக்கின்றன. அவை வேண்டிய யாவும் தரும்.

அஜீஸ்: ஆம். என் அன்பு மனைவி இங்குதான் இருக்கிருள் என்பது எனக்கும் தெரியும். எனினும் மனைவியைவிட எனக்கு மாநிலத்தாய் பெரியவள். காதலைவிட எனக்குக் கடமை பெரிது. மேலும், நாங்கள் காமதேனுவையும் கற்பகத் தருவையும் நம்பி வாழ்பவர்கள் அல்லர். கை வருந்த உழைக்கும் உழைப்பையே கடவுளாகக் கருது பவர்கள். உழைப்பின் பயனையே பெரிதென மதிப் பவர்கள்—கடமை பெரிதெனக் கருதிக் காற்றெனச் சுழன்று கருமம் இயற்றும் கர்மவீரர் காமராசர் எம் பெரியவர். அவர் எமக்குக் கற்பித்துள்ள பாடம் கடமை கடமை கடமை! ஆதலால், காமதேனுவும்

கற்பகத் தருவும் உங்களிடமே இருக்கட்டும். என்னை விரைவில் அனுப்பி வையுங்கள்.

பரம் : (வாயிற் காவலன் கொணர்ந்த ஓலைச் சுருளை வாங்கிப் படித்துவிட்டு) ஏனப்பா! பாரதத்தின் மீது சீறிவரும் சீனுவும், பாதகம் விளைவிக்கும் பாகிஸ்தானும் பகைகொண்டு போர் தொடுத்திருக்கின்றனவாமே! இந்த நிலையில் பாரதத்திற்குப் போவானேன்?

அஜீஸ் : அதற்காகத்தான் நான் உடனடியாக பாரதத் திற்குப் போயாக வேண்டியிருக்கிறது. தயவு செய்து என்னை உடனடியாக அனுப்பிவையுங்கள். வேண்டு மானுல் ஓர் உறுதிமொழி தருகிறேன். எனது கடமை களை நிறைவேற்றிவிட்டு, நானே இங்கு வந்து விடு கிறேன்.

பரம் : அஜீஸ்! நீ என்னையே வென்றுவிட்டாய். இத்தகு கடமையுணர்வு நிறைந்த உன்னுடைய வாழ்க்கைப் பயணத்தில் காலத்திற்கு முந்தியே வந்து குறுக்கிட்டுத் தடைசெய்த இக்காலனும், சரக்குந்து ஓட்டியும் கண்ட னத்திற்கு உரியவர்கள். ஏன்? கடுமையான தண்ட னைக்கு உரியவர்கள். உன் விருப்பம்போல் இவர்களுக்குத் தண்டனையளிக்க விரும்புகிறேன். என்ன சொல்லுகிறுய்?

அஜீஸ் : (புன்முறுவல் பூத்த முகத்துடன்) ஐயகோ! பாவம்! ஒருவர் காலன். அவராக இப்பிழை செய்ய வில்லை. சரக்குந்து ஓட்டியின் அவசரத்தால் நேர்ந்த விளைவு. ஆகவே காலன் மன்னிக்கத் தக்கவர். சரக் குந்து ஓட்டி அவசரப்பட்டு விட்டார். பதறிய காரியம் சிதறும் என்பதை அறியாதவராகிவிட்டார். அவர் நிலைக்கு இரங்குகிறேன். எனினும் எம்முடன் பிறந்தவ ராகிவிட்டார். ஆதலால், தயவு செய்து அவரையும் மன்னித்து விடுங்கள். இனிமேல் இம்மாதிரி இல்லாமல் கவனமாக இருக்கும்படி நல்லுரையும் கூறியனுப்புங் கள்.

பரம் : அஜீஸ்! உன்னுடைய குணநலன்களையும் கடமையுணர்வையும் நாம் பெரிதும் பாராட்டுகிறோம். அவை விண்ணகத்திற்கும் தேவை. ஆனாலும், இன்றைய பாரதத்திற்கு அதிகப் பயன்படுமாதலால் நீ சென்று வா! உன்னுடைய முயற்சிகளுக்கு என்னுடைய நல் வாழ்த்துக்கள்!

அஜீஸ் : மிக்க நன்றி.

'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி சிறந்தனவே'

(பாடிக்கொண்டே மண்ணகத்திற்கு வருகிறார்.)

## அமரர் அஜீஸ்

### திருலோக சீதாராம்

உயர்ந்த மனிதர் அஜீஸ் அவர்கள் இன்று அமரராக விளங்குகிறார். அவர் தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளர் என்ற முறையில்தான் அவருடன் தொடர்பு கொள்ளும் வாய்ப்புப் பெற்றேன். காங்கிரஸ் இலக்கியப் பிரிவு ஒன்றை முறையாகத் தொடங்கிச் சில காரியங்களைச் செய்யும் பணியை மேற்கொண்டு சென்னை சென்றதனால் அந்த வாய்ப்பு எனக்குக் கிட்டியது. நான் ஏற்றுக்கொண்ட பணியைத் தொடர்ந்து செய்ய இயலாது போயினும் அங்கு எனக்குக் கிடைத்த நற்றுணைகளில் அஜீஸ் அவர்களின் தொடர்பு மிகவும் சிலாக்கியமானதாகும்.

அவரைச் சந்தித்தபோதே அவர் 'அவ்வுலகப் பார்வை' பெற்ற அபூர்வப் பிறவி என்ற நன்மதிப்பு அவர்பால் எனக்கு ஏற்பட்டுவிட்டது. விட்ட குறை தொட்ட குறையாக மற்றுமொரு பிறப்பெடுத்துள்ள உத்தம ஜீவர் என்ற உண்மையை அவர் தமது ஒவ்வொரு சொல்லிலும் செயலிலும் நிரூபித்துக் கொண்டிருந்தார்.

நல்லிளமை, உயர்ந்த படிப்பு, ஆழ்ந்த சிந்தனை, அருள் பழுத்த உள்ளம், தூய்மையான செயல்கள், மக்கட்குலத்தின் பால் எல்லையற்ற பரிவு, இளைஞர்களிடம் அபார நம்பிக்கை, இவ்வளவும் குடிகொண்டிருந்த அவருடைய நெஞ்சம் அபூர்வ மான பிறவி என்பதைப் புலப்படுத்திக் கொண்டிருந்தது. உண்மையில் அவரது உள்ளத்தில் ஒருவித நிச்சயத் தன்மை இருந்திராவிட்டால் அரசியலில் ஈடுபட அவரால் முடிந் திராது. சமதர்சனம் கொண்ட சத்தான ஒரு உயர்ந்த ஞானியாகத்தான் அவரை நான் கண்டேன். இரண்டாண்டு களாக அவரை ஆண்டவன் புரிந்த சோதனைகளை எவ்வளவு சிந்தித்தும் புரிந்துகொள்ள நம்மால் முடியவில்லை. நல்லவர் களுக்கு ஆண்டவன் காட்டுகின்ற அருளின் பான்மையா இது என்று எண்ணியபோது விதியின் பயங்கர வழி நம்மை அச் சுறுத்தத்தான் செய்கிறது. ஒருக்கால் அவர் அந்த வழியின் பொருளை உள்ளவாறு உணர்ந்து கொண்டிருந்தாரோ என்று இப்போது தோன்றுகிறது. இல்லாவிட்டால் அருமை மனைவியின் பயங்கரமான முடிவுக்குப் பிறகு ஒரு கர்ம யோகியைப்போல் அவர் தமது பணியில் யாதொரு குறைவு மின்றி ஈடுபடவும், உடனிருக்கும் ஊழியர்களை உற்சாகப் படுத்திச் செயலில் ஈடுபடுத்தவும் அவரால் முடிந்திருக்குமா ?

சிந்தனையாளர் மன்றம் அவருக்கு ஏற்றதோர் நல்ல அமைப்பாக வளர்ந்து கொண்டிருந்தது. மனம் விட்டுப் பிரச்னைகளை விவாதிக்கவும், நல்ல முடிவுகளைக் காணவும், உயர்ந்த லட்சியங்களைப்பற்றிப் புரிந்துகொள்ளவும் சிந்தனை யாளர் மன்றத் தோழர்களுக்கு அவர் வழிகாட்டி நடத்தி வந்தார். நமது பாரம்பர்யப் பண்பாடுகளிலும் கலைகளிலும் அவருக்குப் பெரு நம்பிக்கையும் ஆவலும் உண்டு. அரசியலை அவர் அதிகார பீடமாகவே எண்ணியதில்லை. சேவைக்குரிய ஒரு சாதனமாகவே மதித்தார். தமது நண்பர்களுக்கெல் லாம் அதைத்தான் அவர் சொல்லி வந்தார். அநீதிகளைக் கண்டு குமுறி வரும் இளைஞர்களுக்கு அமைதியும் சாந்தமும் ஏற்படுமாறு அவர் கூறிய விளக்கங்களும் தீமைகளை உள்ளத்

தூய்மையால்தான் வெல்ல முடியும் என்று எடுத்துக்காட்டிய கனிவும் அபூர்வமானவை.

அஜீஸ் நம்முடன் ஒருவராக வாழ்ந்தார். இப்பொழுது அமரர்களுடன் வாழப் போய் விட்டார். அவருடைய வாழ்வுக்கு ஒரு மாசும் கிடையாது. அவரை இழந்துவிட்ட தனுல் நாம் அடைந்துள்ள நஷ்டம்தான் ஈடுசெய்ய முடியாதது.

சிந்தையில் ஆயிரம் எண்ணங்கள் வளர்த்துச் சிறந்த நமது முன்னோர்களைப்பற்றிப் பாடிய பாரதி—'பின் அங்கவர் மாய அவருடல் பூந்துகள் ஆர்ந்ததும் இந்நாடே' என்று கூறியிருக்கும் வாசகம்தான் நினைவுக்குவருகிறது. அஜீஸ் அவர்கள் மறைந்தார். அவருடற்பூந்துகள் நமது மண்ணிற்கலந்து வளங் கூட்டியிருக்கிறது. நம்மைச் சுற்றியுள்ள காற்றிலும் அவரது வாழ்வின் மூச்சு கலந்து மணங் கமழ்கிறது. அவரது பொருள் பொதிந்த வாழ்வின் செய்தியைப் போற்றுகிறேன்.

## அன்பு நண்பர் அஜீஸ்

### நாரண. துரைக்கண்ணன்

இரண்டு மாதங்களுக்கு முன் ஒருநாள் மாலை. வீடு திரும்புகையில், வழக்கமாக வாங்கும் சுதேசமித்திரன், மெயில் பத்திரிகைகளை வாங்கிக்கொண்டு பார்க் ஸ்டேஷனுக்குச் சென்றேன். ரயில் வருவதற்கிடையில் பத்திரிகையை புரட்டிப் பார்த்துக்கொண்டிருப்பது என் வழக்கம். அதன்படி புரட்டிய பத்திரிகையில் ஒரு பக்கத்தில் காணப்பட்ட செய்தியொன்றைக் கண்டதும் என் கண்கள் நிலைகுத்தி நின்று விட்டன. என்னையறியாமலே 'ஐயோ' என என் வாய் அலறியது. இந்த அவல ஒலி என் பக்கத்தில் நின்றிருந்த சிலரை விதிர்ப்புற வைத்திருக்க வேண்டும். அவர்கள் முதலில் என்னைப் பார்த்தனர். பின் நான் பார்த்துவிட்டு

பார்த்துவிட்டு அலறிய பத்திரிகைச் செய்தியைக் குனிந்து பார்த்தனர். மீண்டும் என்னை ஏற இறங்க நோக்கினர். நான் அணிந்திருந்த கதராடையைக் கவனித்துவிட்டு ஏதோ புரிந்துகொண்டதுபோல், அவர்கள் தலையை ஆட்டிவிட்டுத் மெல்லப் பேசிக்கொள்ளலாயினர்.

"இரண்டு மூன்று நாளாகவே உணர்வே இல்லாமல் இருக்கிறார் என்ற செய்தியைப் பார்த்தபோதே சந்தேகப் பட்டேன், ஐயா! அப்படியே ஆய்விட்டது."

உள்ளப் பொருமலைத் தாங்க முடியாமல் வெளிவந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நான் மெல்ல அவ் விடத்தை விட்டு நகர்ந்து தனிமையை நாடினேன். இதற்குள் மின்சார ரயில் வந்து விடவே எல்லோரும் ரயிலில் ஏறினோம்.

இவ்விதம் என்னைக் கலங்க வைத்த துயரச் செய்தி என்ன வென்பதை இதற்குள் அறிந்திருக்கலாம். அன்பு நண்பர் அஜீஸின் அகால மரணம் என்னைப்போலவே அவரை அறிந் தவர்களையும் அவருடன் பழகியவர்களையும் ஆறாத்துயரில் ஆழ்த்தியிருப்பதை, இன்னமும் தொடர்ந்து வந்துகொண் டிருக்கும் அறிக்கைகள், இரங்கற் கூட்டங்களின் செய்திகளி லிருந்து தெரிந்து கொண்டு வருகிறோம்.

இப்போது ஏற்பட்ட அகால மரணத்துக்கு முன் அஜீ ஸுக்கு இரண்டு விபத்துக்கள் தொடர்ந்து நிகழ்ந்தன. (சிலர் இவற்றைக் கண்டங்கள் என்பார்கள்.) ஒன்று திருச் செங்கோடு தொகுதிக்கு நடந்த இடைத் தேர்தலின்போது கிணறு ஒன்றில் தவறி விழுந்து விட்டது; தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று என்ற பழமொழியை மெய்ப் பிப்பது போல், உயிருக்கே தீங்கு உண்டாக்கக் கூடிய அந்த விபத்தில் சில பற்களை மட்டுமே அவர் இழக்க நேர்ந்தது. இச்சம்பவம் என்னைப் போன்ற நண்பர்களைப் பெரிதும் வருந்தச் செய்தது.

அடுத்து, இவ்வாண்டின் தொடக்கத்தில் இந்தி எதிர்ப்பு பெயரால் நிகழ்ந்த கலகத்தின்போது, 'காங்கிரஸ் செயலாள

ரான அஜீஸ் பச்சையப்பன் கல்லூரி மாணவர் விடுதிக்குச் சென்று, மாணவர்களைத் தூண்டி விட்டார்' என்ற வீண்பழி. இது விபத்தைவிடக் கொடுமையானது.

இந்த இரண்டு பெரிய கண்டங்களுக்குத் தப்பிவிட்ட அஜீஸ் வேலூரில் ஏற்பட்ட இந்தக் கார் விபத்திலிருந்து மட்டும் தப்பவே முடியவில்லை. இது விதியின் முடிவு; இதை யாரும் வெல்ல முடியாது என்பது இதற்கு முன் எத்தனையோ சம்பவங்கள் அறிவுறுத்தி வந்திருக்கின்றன. நம் அன்பர் அஜீஸின் அகால மரணமும் இப்போது இப்பேருண்மையை மீண்டும் நமக்கு அறிவுறுத்தியிருக்கிறது.

* * *

என் வாழ்க்கையில் எத்தனையோ ஆயிரக்கணக்கான மனிதர்களைப் பார்த்திருக்கிறேன்; பலருடன் பழகியிருக்கிறேன். நான் வெறும் எழுத்தாளனாக மட்டுமல்லாமல் பத்திரிகாசிரியனாகவும் இருந்து வந்ததால், பல்லாயிரக் கணக்கான மக்களுடன், தேசத் தலைவர்களையும், பொது வாழ்வில் ஈடுபட்டுள்ள பெரியார்களையும், சமுதாய சீர்திருத்தச் செம்மல்களையும், கலைஞர்களையும், அரசியல்வாதிகளையும் நேரில் அறிந்து உறவாடிப் பலருடைய குண இயல்புகளை ஓரளவு உணர்ந்து கொள்ளும் வாய்ப்பு கிடைக்கலாயிற்று. பிறந்த நாட்டுக்கும் மொழிக்கும் பாடுபடுபவர்கள் எல்லோரும் என் அன்புக்கும் மதிப்புக்கும் உரியவர்களானாலும், என் நெஞ்சில் இடம் பெற்றிருப்பவர்கள் ஒரு சிலர்தான். அவர்களில் ஒருவர் அன்பர் அஜீஸ் என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்.

பல ஆண்டுகளுக்கு முன் சென்னை லயோலா கல்லூரியில் நான் சொற்பொழிவாற்ற சென்றபோது, பி. ஏ. வகுப்பு மாணவராக அஜீஸைப் பார்த்தேன். இயற்கையிலேயே

சாந்தி தவழும் நகை முகம் என்னை முதல் பார்வையிலேயே கவர்ந்து விட்டது. கொலையும் கொடிய ஒழுக்கங்களும் மலிந்திருந்த உலகில்—முக்கியமாக அரேபியாவில்—சாந்தியைத் தழைக்கச் செய்வதற்காகவே முகம்மது நபி (ஸல்) அவர்கள் இஸ்லாம் மதத்தை ஏற்படுத்தினார்கள். இஸ்லாம் என்ற சொல்லுக்கே சாந்தி என்றுதான் பொருளாகும். அந்த சாந்தி மார்க்கத்தை அஜீஸ் அவர்களின் நடைமுறை வாழ்க்கையில் கண்டேன். அஜீஸ் இஸ்லாம் மதத்தின் நடமாடும் சின்னமாக விளங்கிவந்தார் என்றால்கூட மிகையாகாது.

சிலர் சாதாரண வாழ்க்கையிலிருந்து பட்டம், பதவி, அந்தஸ்து, செல்வம் செல்வாக்குகளால் உயர்ந்தவுடனே பழைமையை மறந்து விடுவார்கள் உற்றவர்களையும் நண்பர்களையுங்கூடக் கவனிக்க மாட்டார்கள். ஆனால், அஜீஸ் மாணவராயிருந்து, மாணவர் தலைவராகப் பேர் பெற்று, காங்கிரஸில் சேர்ந்து தொண்டு புரிந்து தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளர்களில் ஒருவராகிப் பெரும் பிரசித்தி அடைந்த பின்னரும் பெரியவர்களிடமும் நண்பர்களிடமும் அன்பும் மதிப்பும் காட்டுவதற்கு ஒருபோதும் தவறியதில்லை. இத்தகைய அருங்குணம்தான் அவரைக் கண்டு பழகும் அனைவருடைய உள்ளங்களையும் கவர்ந்து வந்தது. லயோலா கல்லூரிப் பேராசிரியர்களும், சட்டக் கல்லூரிப் பேராசிரியர்களும் அஜீஸ்பால் கொண்டிருந்த அன்பை நான் நன்கு அறிவேன்.

*　　　*　　　*

அஜீஸ் என்பால் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருந்தார். அவர் தொடர்பு கொண்ட கல்லூரிகளின் இலக்கிய மன்றக் கூட்டங்களுக்கெல்லாம் என்னை அழைத்துப் பெருமைப் படுத்தியிருக்கிறார். நான் கலந்துகொள்ளும் பொதுநிகழ்ச்சிகளிலும் கூட்டங்களிலும் அவரும் பலமுறை பங்கு கொண்டிருக்கிறார்.

கடைசியாக, சென்னை "உட்லண்ட்''ஸில் நடந்த விழா வொன்றில் அன்பர் அஜீஸ் என்னைச் சந்தித்தார். பிரமுகர்கள் பலருடன் போய்க்கொண்டிருந்த அவர் என்னைப் பார்த்துவிட்டு வணக்கம் தெரிவித்துக்கொண்டே என்னை யணுகி, "உங்கள் அறுபதாம் ஆண்டு பிறந்த நாள் விழாவில் நான் பங்கு கொள்ள முடியாமல் போய்விட்டது. அச்சமயம் சுற்றுப்பிரயாணத்தில் இருந்தேன். முன்பே தெரிந்திருந்தால் அப்பயணத்தைத் தள்ளிப் போட்டு விட்டு வந்திருப்பேன்'' என்று என் கரங்களைப் பற்றிக்கொண்டு பரிவுடன் கூறினார். அவருடைய அப்பெருங் குணத்தைக் கண்டு என் நெஞ்சம் அப்படியே நெகிழ்ந்து போய்விட்டது.

நான் பொதுவாழ்வில் எத்தனையோ பேருக்கு எத்தனையோ வகையில் என்னால் இயன்றவரை உதவி புரிந்து வந்திருக்கிறேன். பலருடைய முன்னேற்றத்துக்கு உறுதுணையாயிருந்திருக்கிறேன். என் பேச்சாலும், எழுத்தாலும் மட்டுமன்றி ஒல்லும் வகையால் எல்லாம் அன்பும் ஆதரவுங் காட்டி வந்திருக்கிறேன். அப்படி என்னால் உயர்த்தப்பட்ட, தமிழகத்துக்கு அறிமுகப் படுத்தப்பட்ட—பேரும் புகழும் பெரும் பிரசித்தியும் ஏற்பட வழி வகுக்கப்பட்ட-எழுத்தாளர்கள், பேச்சாளர்கள், பத்திரிகையாளர்கள், கலைஞர்கள், அரசியல் தலைவர்கள், பலர் நான் சமீபகாலமாக வாழ்க்கைச் சோதனையால் பாதிக்கப்பட்டுப் புகழ் மங்கியிருப்பது காரணமாக எனக்குச் சந்தர்ப்பம் ஏற்படும் சமயத்திலும், தங்கள் கடமையைச் செய்ய, நன்றியுணர்ச்சி காட்டத் தயங்கி ஒதுங்கியிருக்கும் நிலையில், அஜீஸ் அவர்கள் என்பால் காட்டி வந்த உண்மையன்பை நினைந்து பார்க்குங்கால் என் நெஞ்சம் விம்மிதமுறுகிறது. அவருடைய சாந்தமான இனிய முகமும், சதா புன்னகை தவழும் வதனமும், இங்கித மொழிகளும் என் அகக்கண்களிலும் செவிகளிலும் காட்சி தந்து ஒலித்துக்கொண்டே இருக்கின்றன. நெஞ்சிருக்கும் நினைவில் இருக்கத் தக்க இத்தகைய உத்தம மனிதரை யார்தான் எப்படி மறக்க முடியும்?

# இளைஞர் உலகத்தின் இழப்பு

ஈ. வெ. கி. சம்பத்

இளைஞர் ஏறு, நமது ஆருயிர்த் தோழர் அஜீஸ் அவர்களின் மறைவு, முற்போக்கு அரசியலின் முன்னணியில் உள்ள இளைஞர்களனைவருக்குமே, ஓர் பேரிடி! பேரிழப்பு!

அஜீஸ் பொதுத்தொண்டில் ஈடுபடும் இளைஞர்களுக்கோர் இலக்கணமாய், ஒழுக்கத்தில் உயர்ந்தவராய், தீய பழக்கங்கள் எதுவுமற்ற தூய வாழ்க்கைக்கு முன்னுதாரணமாய்த் திகழ்ந்தார். வற்றாத ஆர்வத்துடன், சலியாது காங்கிரஸ் பணியாற்றும் சீரிய தொண்டராய், இளைஞர் அணிக்குத் தலைவராய் விளங்கினார். அவரது எழுத்தும், பேச்சும் குன்றிக் குமைந்தோரை நிமிர்த்தும்—சலித்துச் சோர்ந்தோரை உணர்ச்சிப் பிழம்பாக்கும்—ஆற்றல் படைத்தன.

கட்சியில் மூத்தோரின் அன்புக்கும், நம்பிக்கைக்கும் உரியவராயும், இளைஞர்களின் நெஞ்சத்தில் இடம்பெற்ற சீரிய தலைவராயும் அஜீஸ் விளங்கினார்.

வீடு, வாசல், குடும்பம், சுற்றம் எதனைப் பற்றியும் சிறிதும் கவலை கொள்ளாது நாட்டுப் பணியே தனது மூச்சென்று முழுக்க முழுக்க பொதுப்பணியிலேயே ஈடுபட்டிருந்த ஓர் பேரிளைஞரை இழந்து விட்டோம்.

கல்வியிற் சிறந்து, கேள்வியில் மிகுந்து, அரசியல் நுண்கலைகளில் தேர்ந்து, "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்னும் கொள்கையில் திளைத்து தெளிவும், துணிவும், இலட்சியப் பிடிப்பும் மிளிர நம்மருந்தோழராய்ப் பணியாற்றிய அஜீஸ் நமக்கு வெறும் நினைவாகிவிட்டார்-நம்மைப் பிரிந்தார்.

தமிழ்நாடு காங்கிரஸ் அலுவலகம், அங்கு சதா இளைஞர் குழாத்தோடு கலகலவென நடமாடிக் கொண்டிருந்த, தேன்

கூடன்ன அஜீஸ் இல்லாமல் இயங்கப் பயின்று கொள்ளுதல் வேண்டும்!

நட்புக்கினியவர், அன்புக்கு நெகிழ்பவர், தலைமைக்குப் பணிபவர், தோழமைக்குகந்தவர்—என அடுக்கிக்கொண்டே போகலாம் அஜீஸுக்கான அடை மொழிகளை.

நாட்டில் உள்ள அரசியல் தீய, பிற்போக்குச் சக்திகளோடு சமர்புரிந்து வரும் சமதர்ம முற்போக்குப் படைவரிசை தனது பெருந் தளபதிகளில் ஒருவரை இழந்து விட்டது.

அவரது மனைவி மக்களுக்கும், அவரது மாமனார் பழம் பெரும் தேசபக்தர் திரு. ஷெரிப் அவர்களுக்கும், ஏனைய அவரது குடும்பத்தினருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களை கண்ணீருடன் சமர்ப்பித்துக்கொள்கிறோம்.

## வீர இளைஞர்

### கவி. கா. மு. ஷெரீப்

அறிவும் திருவும் இணைந்திருப்பது அரிது என்று சொல்வது போல, இளமையும் பண்பும் இணைந்திருப்பது அரிதானதே. அதுவும் இந்த நாகரீக யுகத்தில், இளைஞர்களிடம் பண்பைக் காண்பது இயலாத ஒன்றாக இருக்கின்றது. சாதாரண இளைஞர்கட்கே இந்த நிலையென்றால் பொறுப்புள்ள பதவியில் இருக்கும் இளைஞர்களைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. ஆனால் இந்த விதி முறைகட்கு மாறுபட்ட நல்ல இளைஞர்கள் பலரை நமது நாடு பெற்றுத் திகழ்கிறது என்பது நமக்கெல்லாம் பெருமையளிக்கக்கூடிய ஒன்றாகும்.

அண்மையில் காலம் சென்ற தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளரான அஜீஸ் அவர்கள் பண்பாடோடு கூடிய நல்ல இளைஞர்; படித்தவர்; படாடோபமற்றவர். நிதானத் தன்மையுடையவர். பெரியோர்களிடத்தில் மரியாதை

காட்டும் இயல்புடையவர். இளைஞர்களை உற்சாகமூட்டி செயல்பட வைக்கும் திறன் படைத்தவர். தோழமைக்கு மதிப்பளிப்பவர். தேச பக்தி நிறைந்தவர். தான் சார்ந் திருந்த காங்கிரஸ் அமைப்பினை, எவற்றிலும் மேலாக மதித்துச் செயல்படும் நேர்மையாளர். சிறு பிராயத்தில் பெரும் பதவி வகித்த அதிர்ஷ்ட சீலர். தனக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தைத் தன்னலத்திற்குப் பயன்படுத்திக் கொள் ளாது வாழ்ந்த நல்லவர்.

அஜீஸ் அவர்களுடன் நான் ஒன்றுபட்டு நின்று தொண்டு செய்யும் வாய்ப்பில்லாதவன். என்றாலும் பல முறை அவருடன் பழகும் சந்தர்ப்பத்தைப் பெற்றிருக்கிறேன். நான் அவரைச் சந்தித்த அந்தச் சில சமயங்கள் என் நெஞ்சில் நிலைபெற்று அழியாது நிற்கின்றன. தன்னைச் சந்தித்தவர்கள் எளிதில் தன்னை மறந்துவிட முடியாத வகையில் பழகும் தன்மை படைத்தவர் அஜீஸ் என்பது நான் அறிந்துகொண்ட உண்மை.

ஆர்ப்பாட்டமில்லாது செயல் படுவதிலேதான் அஜீஸ் விருப்பம் கொண்டிருந்தார் என்பது அவருடைய நடவடிக் கையும், தோற்றமும் தரும் சான்றுகளாகும்.

அஜீஸை விட அவருடைய மாமனாராகிய கும்பகோணம் கே. எம். ஷெரீப் அவர்களை நான் நன்கு அறிவேன். முதுபெரும் தேசபக்தர் அவர். சுதந்திரப் போராட்ட நாளில் பாகிஸ்தான் பிரித்துக் கொடுக்கக்கூடாது என்று கூறிய தேசீய முஸ்லிம் அணியில் நானும், கும்ப கோணம் கே. எம். ஷெரீப் அவர்களும் இணைந்திருந்தோம். ஆகையால் அஜீஸ் அவர்களைக் காணுந்தோறும் கும்ப கோணம் ஷெரீப்தான் என் நினைவுக்கு வருவார். அந்த நினைப்போடுதான் நான் சந்திக்கும்போதெல்லாம் அஜீஸ் அவர்களுடன் உரையாடுவேன். அது எனக்குப் பெரும் மகிழ்வைத் தரும். மிகச் சிறந்த தேசபக்தக் குடும்பத்தில் வாழ்க்கையிலும் தன்னைப் பிணைத்துக் கொண்டுவிட்ட இளைஞர் அஜீஸ் குடும்பச் சூழ்நிலையாலும் தேசபக்த பாரம்

பரியத்தை எல்லோர் மனத்திலும் நிரப்புவராகத் திகழ்ந்தார்.

அஜீஸின்பால் வெறுப்படையக்கூடிய குணம் எதுவுமே இல்லை. அதனுல் அவரை வெறுப்போர்கள் யாருமே இல்லையென்று துணிந்து சொல்லலாம். மாற்றுக் கட்சியினரும் மதிக்கின்ற பண்பு வழித் தேசபக்தர் அஜீஸ்.

பழைய தேசபக்தர்களைக் கண்டுவிட்டால் அவர்களிடம் அஜீஸ் பழகும் முறையே அலாதியாக இருக்கும். ஏறக்குறைய தன்னை ஒரு குழந்தை போன்று அவர்களிடத்திலே காட்டிக் கொள்வதில் அஜீஸிற்குத் தனிச்சுவை தோன்றும் போலும்.

நண்பர்களால், கட்சிக்காரர்களால், குடும்பத்தினரால் மாற்றுக் கட்சியினராலும் கூடப் பெருமதிப்புத் தரப்பட்டு வந்த அஜீஸை விபத்து மட்டிலும் விடாமல் தொடர்ந்து கொண்டே வந்திருக்கிறது.

சேலம் மாவட்டத்தில் தேர்தல் பிரசாரச் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது பெரும் விபத்துக் குள்ளாயினர். அவர் மனைவி பெரும் விபத்தில் ஆவி துறந்தார். அது நடந்து ஒராண்டிற்குள் அஜீஸை பெரும் விபத்து நம்மிடையேயிருந்து கவர்ந்து சென்று விட்டது.

இளைஞர்களின் தலைவராக, மாணவர்களின் தோழராக, தமிழ்நாடு காங்கிரஸின் செயலாளராக, பழைய தேசபக்தர்களின் முன் மாணவராக, பதவிக்குத் தகுந்த பொறுப்பாளராக, அடக்கமுடையவராக, தொண்டில் குதூகலமடைபவராக, குடும்பத்தை மறந்தும் தேசபக்தியில் தேசத் தொண்டில் அக்கறை கொண்டவராக வாழ்ந்த நல்ல இளைஞரான அஜீஸ் மறைந்து விட்டதை நினைக்கும்போது அவருடன் சிறிது பழகியவர்களால்கூட மனத்தைத் தேற்றிக் கொள்ள முடியாதென்ருல் அவருடைய குடும்பத்தினருடைய நிலையைச் சொல்லவும் வேண்டுமோ?

இளைஞர்களிடத்திலே தேசபக்தி அரிதாகிக்கொண்டு வரும் இந்த நாளில் நல்ல தேசபக்தரான இளைஞர் அஜீஸ்

நம்மைவிட்டு மறைந்து விட்டது தேசத்திற்குப் பெரும் நஷ்டமாகும்.

சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்களின் 56-வது பிறந்த தினத்தைக் கொண்டாட இடம் தேவைப்பட்டு தேனும்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் உள்ள கலை அரங்கைக் கேட்கலாம் என்ற நினைப்போடு ஒரு முறை அஜீஸைச் சந்திக்கச் சென்றிருந்தேன். அப்பொழுது அவர்கள் தலைவர் ம. பொ. சி. யிடத்திலே வைத்திருந்த பெருமதிப்பை என்னால் நன்கு புரிந்துகொள்ள முடிந்தது. என்னுடன் வந்து இடங்களைச் சுட்டிக்காட்டி, "என்னென்ன வசதி இங்கு உங்கட்கு வேண்டுமோ, அனைத்தும் செய்து தரச் செய்கிறேன். விழாவை நல்ல முறையில் நடத்துங்கள்'' என்று கூறி, அதே போன்று செய்துமளித்தார்.

அவருடைய துணைவி இறந்த துக்கநாள் கடப்பதற்கு முன்பே என் மகள் ஒளவைக்குத் திருமணம் நடைபெற்றது. அப்படியிருந்தும் அந்தத் திருமணத்திற்கு நேரில் வந்திருந்து வாழ்த்துக் கூறிச் செல்லும் கடமையை அவர் மறவாது செய்தார்.

இதைப் போன்று பலப் பல நிகழ்ச்சிகள். எல்லாம் பசுமையான நினைப்புக்குரியவை.

எதிர்பாராது நிகழும் விபத்து மரணத்தை வீர மரணம் என்றே குறிப்பிடுகின்றார் மகான் முகமது நபி. அந்தக் கண்ணோடு நோக்கும்போது தேசபக்தர் அஜீஸ் வீர மரணம் எய்தியிருக்கிறார். ஒரு தேசபக்தனுக்கு வீர மரணத்தைவிட கிடைத்தற்கரிய பேறு வேறு என்ன இருக்க முடியும்! அஜீஸ் வாழ்க்கையில் மட்டுமல்ல, மரணத்தாலும் வீரராக அமர நிலை எய்திவிட்டார். இந்த நிலை ஆறுதலுக்குரியதுதான் என்றாலும் அவர் இன்னும் பல ஆண்டுகள் வாழ்ந்து, இந்த நாட்டிற்குச் சேவை செய்ய வேண்டிய நல்லவர் என்பதை மறப்பதற்கில்லை. அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்திருக்க வேண்டும், வாழ்வார் என்று நம்பிக் கொண்டிருக்கும்

போதே பிரிந்து விட்டார். அவருடைய அந்த மரணம்தான் எத்தகைய பயங்கரமானது!

மருத்துவ மனையில் ம. பொ. சி. அவர்களுடன் நான் சென்று பார்த்தேன். அப்பொழுது அவர் மரணத்துடன் போராடிக் கொண்டிருந்தார். அந்தக் காட்சி நினைப்பதற்கே பயங்கரமானது. மரணம் தவிர்க்க முடியாத ஒன்றுதான் என்றாலும் மரணத்துடன் போராடிச் சாவதென்பது விரும்பக்கூடிய ஒன்றல்ல! மரணம் விரும்பியபடி வாய்ப்ப தில்லை. அதன் விருப்பத்திற்கு நம்மை இழுத்துச் செல்கிறது. அஜீஸ் முதுமையடைந்து, அந்த முதுமையின் நொம்பலத் திற்கு ஆட்படாமல் சென்று விட்டவர்தான். அவரை நம் அகக் கண் முன் நிறுத்திப் பார்க்கும்போது இளமையோடு மட்டும்தான் திகழ்வார். ஆனால் அப்படியே நாம் ஆறுதல் அடைய முடியவில்லை. கொடிய மரணம் அவரைக் கொடுமைப் படுத்திவிட்டது. நம்மைவிட்டு ஒரு நல்லவரை எடுத்துச் சென்று விட்டது. தேசம் ஒரு வீரனை இழந்து விட்டது. காங்கிரஸ் ஒரு செயலாளரைப் பறிகொடுத்து விட்டது. நண்பர்கள் உற்ற ஒரு தோழரை இழந்து விட்டார்கள். அவருடைய பிள்ளைகள் தந்தையை இழந்து விட்டார்கள். ஆனால் இவற்றையெல்லாம் தடுத்து நிறுத்தும் சக்தி மனிதனுக்கு இல்லையே! மனிதன் மட்டும் சாவைத் தடுக்கும் சக்தி பெற்றிருந்தால் அஜீஸ் மட்டுமல்ல, அண்ணல் காந்தி, அருமைத் தலைவர் நேரு, வீரநெஞ்சம் படைத்த படேல், இன்னும் எத்தனையெத்தனையோ நல்லவர்கள் இன்று நம்மோடிருந்திருப்பார்கள். நாடு நலம் பெற்றிருக்கும். அந்தச் சக்தி நமக்கில்லாததால் அவர்களின் வழிநின்று தேசத்தைக் காப்போம். அஜீஸ் ஆன்மா சாந்தியுறுவதாக!

## அமெரிக்காவில் அஜீஸ்

### வி. எம். செரியன்

நாடு நெடுகிலும் ஆங்காங்கு உள்ளூர்களில் வலுவான ஜனநாயக அமைப்புகள் செயல்படவேண்டும்; பயனுள்ள

ஒரு கல்விமுறை வேண்டும்; உழைப்பிற்கு மதிப்பும், அரும் பாடுபடும் மக்களும் வேண்டும். எந்த நாடானாலும் சரி, அது செழித்து முன்னேறுவதற்கு இவையெல்லாம் இன்றியமையாதவை என்கிறார், தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசி எஸ். என். ஏ. அஜீஸ்.

அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்து சென்னை திரும்பியுள்ள அஜீஸ், அமெரிக்க அரசினருக்கும் மக்களுக்குமிடையே சிறந்த நல்லுணர்வு விளங்குகிறது என்று குறிப்பிட்டார்.

அமெரிக்க வெளி விவகார இலாகா அழைப்பின் பேரில் அவர் அமெரிக்கா சென்றார். அமெரிக்க அரசியல் கட்சிகளின் அமைப்பு, அலுவல்கள், ஊராட்சிகள், கல்வி நிலையங்கள் நடைபெறும் முறை இவற்றை நேரில் பார்வையிடவே அவர் அங்கு சென்றிருந்தார். நாடு முழுதும் விரிவாக இரண்டு மாதங்கள் சுற்றுப் பிரயாணம் செய்தார்.

சின்சினாட்டி (ஒஹையோ), பபலோ (நியூயார்க்), கன்கார்டு (நியூ ஹாம்ப்ஷயர்) ஆகிய நகரங்களில் அஜீஸ் நகர் மன்றக் கூட்டங்களுக்குப் போயிருந்தார்; நிறைவேற்றப்பட வேண்டிய தீர்மானங்கள் எவை என்பது குறித்துக் குறிப்பிட்ட சில நாட்களில் எவ்வாறு பொது விசாரணைகள் நடைபெறுகின்றன என்று அவர் கண்டறிந்தார். பல கட்டடங்களை இடித்துத் தள்ளும் ஒரு தீர்மானம் குறித்து கன்கார்டு நகர் மன்றக் கூட்டத்தில் காரசாரமாக விவாதம் நடைபெற்றது என்றும், மக்கள் தெரிவித்த கருத்துக்களையும் அவர்களது நலன்களையும் உரிய முறையில் அதிகாரிகள் பதிவு செய்து கொண்டார்கள் என்றும் அவர் கூறினார்.

இளைஞர்கள் கல்வி குறித்து ஊராட்சிகள் அக்கறை கொள்ளும் விதம் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் காரியதரிசியைப் பெரிதும் கவர்ந்துள்ளது. ''ஒவ்வொருநகரிலும் ஒரு கல்விக் கழகம் உண்டு; கழகத்தின் உறுப்பினர்கள் அனைவரும் குடிமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட

வர்கள். மாநில அரசாங்கப் பல்கலைக் கழகங்களிலுள்ள கல்விக் கழகங்கள் கூட, மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவையே" என்றார் அஜீஸ்.

கல்விக் கழகங்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் கல்வித் துறைப் பிரச்னைகளில் கட்சிச் சார்பின்றி நடந்து கொள்கின்றனர் என்றும், இவ்வளவுக்கும் உறுப்பினர் பதவிக்குப் போட்டியிடுகையில் அவர்கள் ஏதாவது ஒரு கட்சியின் சார்பிலேயே நிற்பதாகவும் அவர் கூறினார்.

அமெரிக்காவில் வழங்கப்படும் கல்வி முறை, குழந்தைகளின் அறிவையும், தொழில் செய்யும் திறனையும் வளர்த்து வருங்கால வாழ்க்கைக்கு அவர்களை ஆயத்தம் செய்கிறது என்றார் அஜீஸ்; உயர்நிலைப் பள்ளிகளில் புத்தகப் படிப்போடு கூடவே, பாடத் திட்டத்துடன் சீர்பெற இணைக்கப்பட்ட தொழில்பயிற்சியும் வழங்கப்படுகிறது என்றார். ஒன்பதாவது, பத்தாவது வகுப்புக்களில் படிக்கும் மாணவர்கள் தச்சு வேலை வகுப்பில் தரமான மேசை, நாற்காலி முதலியவற்றைச் செய்வதையும், அச்சுக் கூடத்தில் சிறப்பான அச்சு வேலைகள் செய்வதையும் கண்டு தாம் வியப்படைந்ததாக அவர் கூறினார்.

ஆயினும் அமெரிக்க மாணவர்கள் இளமையிலேயே திருமணம் செய்து கொள்ளும் வழக்கம் பெருகுவது அவ்வளவும் நல்லதா என்று கேட்கிறார் அஜீஸ். மணமுடித்த மாணவர்கள் தனியே குடித்தனம் நடத்திக்கொண்டு படிக்கப் பல்கலைக் கழகங்களில் வசதி செய்திருக்கிறார்கள்; அத்தகைய மாணவர்கள் சிலரை அஜீஸ் கண்டு பேசினார். சில மாணவிகள் மணமான பின் குடும்பச் செலவுக்காகப் படிப்பை நிறுத்திவிட்டு வேலை பார்த்தும் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது என்று அவர் கண்டார்.

மணமான பின் மாணவரின் கவனம் சிதறாமல் முழுதும் படிப்பிலேயே இருக்குமென்றும் சொல்ல முடியாது என்று அஜீஸ் குறிப்பிட்டார். எனினும் அவ்வாறு இல்லை என்று ஒரு மாணவி கூறியதாக அவர் கூறினார்.

அமெரிக்க வாழ்க்கையோடு ஒன்றிவிட்ட மற்றொன்றும் அவரைக் கவர்ந்தது; அதுதான் உழைப்புக்கு அளிக்கப்படும் மதிப்பு. சிற்றுண்டிச் சாலே "கியூ" வரிசையில் மாணவர் களோடு கல்லூரித் தலேவரும் நின்ருல் இங்கு யாரும் புருவங்களே உயர்த்துவதில்லே; செல்வந்தரான டாக்டர் ஒருவரின் மகன் வீடு வீடாகச் சென்று பத்திரிகைகள் போட்டு, தன் சொந்தச் செலவுக்காகச் சிறிது பணம் சம்பாதித்தால் அதை யாரும் குறைவாகக் கருதுவதில்லே; ஆலேத் தொழிலாளி ஒருவர், தமது முதலாளி வைத்திருப்பது போன்ற அதே காரில் சென்ருல் யாரும் வியப்புடன் பார்ப்ப தில்லே என்ருர் அஜீஸ்.

டெக்ஸாஸ் மாநிலத்தில் பூமாண்ட் என்னுமிடத்தி லுள்ள நெல் வயல்களுக்கும், ஒரு சோதனே நிலேயத்துக்கும் அவர் சென்றிருந்தார். அங்கு விளேச்சலேப் பெருக்கக் கையாளப்படும் புதுமை முறைகள் அவரைக் கவர்ந்தன. எதிர்பாராத இயற்கை விபரீதங்கள் முதலியவற்றினின்றும் குடியானவர்களுக்குப் பாதுகாப்பளிக்கவுள்ள வசதிகளும் அவரைக் கவர்ந்தன. இவற்ருல் விளேந்துள்ள மொத்த நன்மை, நாட்டு மக்களில் கிட்டத்தட்ட 10 முதல் 11 சத விகிதத்தினர், நாடு முழுமைக்கும் தேவையான உணவை உற்பத்தி செய்வதோடு, ஏராளமாக ஏற்றுமதி செய்வதற்கும் விளேவிக்கின்றனர்" என்ருர் அவர்.

## தன்னலமற்ற சேவை

### என். எஸ். எஸ். மன்ருடியார்

தேசபக்தி, கட்சி விசுவாசம், பொதுத் தொண்டு ஆகிய பண்புகளுக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர் திரு. அஜீஸ். பொதுத் தொண்டில் அவர் அடியெடுத்து வைத்த நாள் முதல் இறுதிக்காலம் வரை காங்கிரஸ் கட்சியின் முழுநேரத் தொண்டராகப் பாடுபட்டார். அவரது தேச பக்தியையும், கட்சி சேவையையும் பாராட்டும் வகையில், தமிழ்நாடு

காங்கிரஸ் கட்சியினர், காரியதரிசி பொறுப்பை அவருக்கு அளித்தனர். குறுகிய காலத்திலேயே கட்சித் தலைவர்களின் நல்லபிமானத்தைப் பெறும் வகையில் ஒய்வு ஒழிவின்றி தேச சேவையில் ஈடுபட்டார். தன்னலமற்ற சேவையால் இளைஞர் மத்தியில் தனிச் செல்வாக்கைப் பெற்றார். அவரது மறைவு ஈடு செய்ய முடியாத இழப்பு என்ற போதிலும், இளைஞரிடையே தேசிய எழுச்சியை ஊட்டிக்கொண்டிருக்கும் ஜீவ சின்னமாக அவர் என்றும் விளங்குவார். அவரது புகழ் என்றும் நிலைத்து நிற்குமாக.

## சிறந்த தொண்டர்

### கே. பி. வி. கிரி

திரு. எஸ். என். ஏ. அஜீஸ் பழகுவதற்கு ஒரு இனிய நண்பர்; மாசற்ற மனமும், தூய்மையான நோக்கங்களும் கொண்ட இளைஞர்; சொந்த சுக துக்கங்கள் என்ற நினைவே இல்லாதவராக எந்நேரமும் இயக்கப் பணிகளிலேயே ஈடுபட்டிருந்த உத்தமர்; நேர்மையான பாதையில் நடப்பதையே குறிக்கோளாகக் கொண்ட கட்சித்தொண்டர்; தலைவர் திரு. காமராஜ் அவர்களிடம் அளவிலாத அன்பு கொண்டிருந்த ஊழியர்.

அவருடைய திடீர் மறைவு தமிழகத்துக்கு ஏற்பட்டு விட்ட ஒரு பேரிழப்பாகும்.

## இலட்சியத் திருவிளக்கு

### எஸ். ராமலிங்கம் எம். எல். ஏ.

அன்பு நண்பர் அஜீஸ் அவர்கள் நம்மைவிட்டுப் பறிக்கப் பட்டது கொடுமையிலும் கொடுமை. பிறந்தவர் இறப்பது இயற்கை. ஆனால் இளமையில் அல்ல. இளம் மொட்டு இரண்டொரு இதழ் விரித்த நிலையில் கருகிவிட்ட நிலைதான் நம்மை அதிர்ச்சியடைய வைத்திருக்கிறது.

பழகுவதில் தனிச்சிறப்புப் படைத்த அஜீஸ் அவர்களுக்கு ஒளிமயமான எதிர்காலம் காத்திருந்தது. தமிழக காங்கிரஸ் ஒரு காரியதரிசியை இழந்தது மட்டுமல்ல; தமிழகமே சிறந்த தொரு பேச்சாளரை, எழுத்தாளரை, சிந்தனையாளரை இழந்துவிட்டது.

கட்சிப்பணியை இலட்சியமாகக்கொண்ட அந்த இலட்சியத் திருவிளக்கின் நினைவு என்றும் பசுமையாக நமக்கு இருக்கும்.

## என்று காண்பேன்?

ரா. கிருஷ்ணசாமி நாயுடு, எம். எல். ஏ,
(தலைவர், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி)

இந்தியன் என்னும் எண்ணமொன்றையே இதயத்தெண்ணி
பந்தமொன்றின்றி வாழ்ந்தான், பரந்த நோக்குளான், பற்றைச்
சந்ததம் விட்டான், சார்ந்த தந்தையும் தமையனுகி
சொந்தமும் இருந்தவாற்றைச் சொல்லவும் மறுத்து வாழ்ந்தான் !

வஞ்சகம் பொய்மை சூதுவாதுகளேது மெண்ணுன்
பஞ்சைகள் வாழ்வு கண்டு பரிதபித்துளம் வெதும்பி
கொஞ்சமென்றெண்ணுதீவான் கொடுமைகள் கண்டொதுங்கான்
அஞ்சலென்றபயங்காப்பான் அனைவர்க்கு மினிய தோழன்

காங்கிரசொன்றே நாட்டின் கஷ்டங்கள் போக்குமென்ற
பாங்கினையுடையான் என்றும் பக்தியோடதையே சார்ந்து
தூங்கிடும் நேரம்போகத் தொல்லைகள் தீர்க்க வேண்டி
ஏங்கிவந்தடுத்த ஏழை இளைஞருக்குதவும் நல்லான் !

அமெரிக்கா சென்று வந்தான், அங்குள்ள நிலைமையாவும்
நமது நாடொப்ப நோக்கி நலத்தினையிங்கு சொன்னான்
தமர்பிறர் என்ற பேதம் தன்னலம் யாவும் தள்ளி
சமர்தொடர் பாகிஸ்தானைச் சாடியே வந்தானெங்கும்

பாரத பாதுகாப்புப் பணிகளில் முனைந்து நின்றான்.
நீரதன் புதல்வர் அந்த நினைவினை மறவாதென்றும்
வீரராய் விளங்கிப் பொன்னைப் பொருள்களை வேணமட்டும்
தீரமாய்ச் சேர்த்தளித்துத் திறத்தினைப் பெருக்க வென்றான்

சோதனையான நேரம் சொல்லொணாத் துயரந்தன்னில்
வேதனைப்படவே விட்டு வெடுக்கெனச் சென்றுவிட்டான்
போதனை ஏற்பான் எந்தன் பிள்ளைபோல் குழைந்துவந்து
காதளவோடு ஒன்றிக் கனிவுடன் பேசி நிற்பான்!!

அன்புடன் அஜீஸ் என்றே நான் அழைத்திடுமக்கணத்தே
இன்பமாயிதோ வந்தேனென்றினியதோர் குரல் கொடுத்தே
எம்முனே வந்து நிற்கும் இளைஞனை என்று காண்பேன்
துன்புறுந்தோழர் உள்ளத்துயரங்களென்றடங்கும்?

நண்பனே அஜீஸே நின்னோடனுதினம் பழகிவந்தோம்
பண்புடைக்குமரனே நீ பரகதியடைந்து விட்டாய்
திண்ணமாய் பாரதத்தில் திரும்பவந்திதுத்து நாட்டைத்
கண்ணெனக்கருதித் தொண்டுபுரியவே யருள்வார் கர்த்தர்!




## அன்பினிற் சிறந்தவன்!

கவிஞர் கண்ணதாசன்

வண்டெனப் பறந்து
வாலிபர் உலகில்
தொண்டு புரிந்தவன்
தூயதமிழ் மகன்

கண்டுகளித்தவர்
விழிகள் இமைக்குமுன்
சென்று மறைந்திடச்
செய்ததே காலமும்

மலரினும் மென்மையான்
வானினும் தூய்மையான்
அலையினும் ஒய்விலான்
ஆற்றினும் கடுகலான்

நிலையினிற் செம்மையான்
நினைவினிற் பசுமையான்
தொலைவழிபோயினும்
தோன்றுவான் நெஞ்சினில்

அன்பினிற்சிறந்தவன்
அஜீஸ் எனும் அன்பனே !
பண்பினில் அவனொரு
பழந்தமிழ் மரபினன்

மென்னகை ஒளிதர
விரித்தகை கூப்புவான்
தன்னையும் மறந்திந்த
தாரணி வணங்குமே !

## புன்னகை மன்னன்

தஞ்சைவாணன். எம், ஏ.,

காங்கிரசுக் கட்சியிலே இளைஞர் வந்தே
களிப்புடனே சேர்கின்றார் ! பணி செய்கின்றார் !
யார் இதனைச் செய்தார்கள் இதுநாள் மட்டும் ?
என்றென்னைக் கேட்பீரேல்—அஜீஸ் தானென்பேன் !

ஓங்குபுகழ் காந்தீயவாதி ! நன்றாய்
உழைத்ததனால் பிழைத்ததுதான் இளைஞர் கொள்கை !
தேங்குகின்ற அறிவின்றி நாளும் நாளும்
திரட்டுகின்ற அறிவுடையார் ! திணரா நெஞ்சர் !

புன்னகையால் வரவேற்று, இருக்கை தந்து
பொறுமையுடன் குறை நிறையைக்கேட்டுத் தேர்ந்து,
"இன்னமும் நீர் கூறுங்கள் பணியைச் செய்ய
இருப்பதுதான் இந்த உடல்" என்பார் ! செய்வார் !

இன்னல் பல வந்தாலும், சிரிப்பைச் சிந்தி
இனிமையுடன் பழகிடுவார் ! சினமே கொள்ளார் !
எண்ணுகின்ற பொழுதினிலே அஜீஸைப்போன்ற
இயல்புடையார் உலகத்தில் சிலரே யம்மா ! !

காவிரியின் வெள்ளம்போல் மேடை மீதில்
கலகலெனப் பேசிடுவார் ! குழந்தை போலே
தாவிநிதம் நடந்திடுவார் ! பிறரின் பேச்சைத்
தலையாட்டி ரசித்திடுவார் ! சிரித்துக்கொள்வார் !

வேகமுடன் தொண்டாற்ற வல்ல நல்லார் !
வெறுக்கின்ற பேச்சென்றால் விரும்ப மாட்டார் !
பாகுதமிழ் மொழியினிலே 'மெல்லினம்' தான்
பண்புடைய அஜீஸிற்குப் பழக்கமாகும் !

பிழையில்லாப் பெருவாழ்க்கை நடத்திவந்தார் !
பெருமையுடன் 'சமதர்மம்' பரப்பி வந்தார் !
நிலைநில்லா தின்றெங்கோ சென்றுவிட்டார் !
நீள்விழியில் நீர்தேக்கி நிற்கின்றோம் யாம் !

இலையுதிரும் காலத்தில் இறந்திடாமல்
இளம் பருவக்காலத்தில் இறக்கக் கண்டோம் !
விலை மதிக்க முடியாத சேவை செய்து
விட்டங்கே நேருவிடம் சேர்ந்தாரம்மா ! !

# நண்பர் அஜீஸின் மறைவு

## கவிஞர் தெசிணி

நமனோர் வஞ்சகன் ; நண்பன் அஜீசை
நாங்கள் துயில்கையில் பிரித்து நடத்தினன் !
கொடுமை அய்யகோ என்னெனக் கூறுகேன்
கொடிது கூற்றுவன் வலிமை கொடிது !
மிகஇளம் பருவம் வேகமாய் அரசியல்
தன்னில் இறங்கித் தலைகளின் சூதினில்
பழுத்த எங்கட்குப் பலநாள் பின்னரே
வந்தனன் எனினும் பொறுப்பில் வளர்ந்தான் !
இயக்கச் செயலனாய் இவனிருந்ததற்குப்
பூரிப்படைந்தாருள் புலவன் முதல்வன் நான் !
எங்கு கண்டாலும் 'கவிஞர் என்ன
செய்கிறார்' என்றே படர்க்கை விகுதியில்
மதித்துக் கேட்குமென் நண்பன் மறைந்தனன் ;
ஆம்இனி யாரே அவ்விதம் நெகிழ்வார் ?
காங்கிர சியக்கம் காளையர் கையில்
வேண்டு மென்று நான் விரும்பிய கனவின்
நனவில் பூத்த நல்ல என் நண்பன்
அவனால் புதுப்புதுக்காரியம் ஆயிரம்
தமிழ்ச்சமு தாயத்திற் காற்றிட எண்ணினேன்
அத்தனை எண்ணமும் அடியொடி டிந்தது
அமைச்சனாய் ஆவான் ; ஆனநல் தொண்டினைத்
தூண்டலாமென்றுந் துடித்திருந் தேனே !
இவற்றை யெல்லாம் ஏனோ அறியான் !
என்னினுந் துறவியோ ? ஏன்பின் உலகை
வெறுத்தான் ? அதுவும் போர்க்கள வேள்வியில்
பாரதம் குதித்துள பொழு(து) அவன் இல்லை !
யாரிடம் இதற்கொரு ஆறுதல் பெறுவேன் ?
கையறு நிலையில் கவிஞன்நான் அழவோ?

# அஜீஸ் பேசுகிறார்

## இமயத்திலே புனித வேள்வி

அரசியல் விடுதலை பெற்ற பாரதம் கடந்த பதினைந்து ஆண்டுக் காலமாக உலக சமாதானத்துக்காக ஓயாது உழைத்து வந்துள்ளது; அணு சகாப்தத்திலே உழலும் இன்றைய உலகில் போர் மூளுமானால், அது ஒரு நாட்டுடன் நிற்குமென்று சொல்லவியலாது. அது பல நாடுகளையும் பாதித்து, மனித இனத்துக்கே அல்லலையும், அழிவினையும் ஏற்படுத்திவிடும். ஆகவே உலக நாடுகளிடையே எங்கு போர்க்குரல் எழுந்தாலும், அங்கெல்லாம் அமைதியை நிலைநாட்டும் பணியில் பாரதம் தன்னை அர்ப்பணித்து வந்துள்ளது. அதிலும் குறிப்பாகக் கொரியாவின் கொந்தளிப்பின் பொழுதும், இந்தோ—சீனப் பகுதியில் ஏற்பட்ட இடைவிடாத் தொல்லையின் பொழுதும், இன்றும் கடாங்காப் பகுதியில் எழுந்துள்ள கலவர நிலையை ஒழுங்கு படுத்தும் புனிதப் பணியிலும், பாரதநாடு ஆற்றியுள்ள அருந்தொண்டினை உலகம் நன்கு அறியும். இவ்வாறெல்லாம் பாரெங்கும் அமைதியை நிலைநாட்ட பாடுபட்டு வந்துள்ள பாரதம் இன்று சோதனைக்கு ஆளாக்கப்பட்டுள்ளது. இது உலக வரலாற்றிலேயே ஒரு திருப்புமுனை என்றுகூட சொல்லலாம்.

அப்பட்டமான ஆக்கிரமிப்பு செய்துள்ள சீனுவுக்கு நல்லதையன்றி பாரதம் தீயதைக் கனவிலும் எண்ணியதில்லை. செஞ்சீனுவை உலக அரங்கில் சேர்த்துக்கொள்ளவும் பல்வேறு நாடுகள் மறுத்து வந்துள்ளன. ஆனுல் பாரதம் செஞ்சீனுவுக்காகப் போராடி வந்துள்ளது. இவ்வாறெல்லாம் நன்மைகள் பல புரிந்து வந்துள்ள நம் நாட்டுக்கு "நயவஞ்சகத்தையும், துரோகத்தையும்தான்" சீனு பரிசாகக் கொடுத்துள்ளது. இந்தக் கொடுமையைக் கண்டு பாரதம் கொதித்தெழுந்துள்ளது. அறுபதுக்கு மேற்பட்ட பல்வேறு நாடுகளும் இந்த நயவஞ்சகத்தைக் கண்டித்துள்ளன. படையெடுப்பாளர்களைப் பாரத மண்ணிலிருந்து விரட்டியடிக்கும் புனிதப் பணிக்கு நல்ல நாடுகள் பலவும் உதவி புரிந்து வருகின்றன.

இந்த அக்கிரமமான படையெடுப்பை எதிர்த்து முறியடிக்க பாரத மக்கள் எழுச்சி பெற்றுவிட்டனர். இந்திய நாட்டில் மொழி, சாதிகள், கலாசார அடிப்படையில் எத்தனையோ வேறுபாடுகள். ஆகவே மக்கள் ஒன்றுபட்டு நிற்க மாட்டார்கள் என்று கனவு கண்ட சீனு இப்பொழுது திகைத்து நிற்கிறது. ஒற்றுமையும், உறுதியும், நாட்டுப்பற்றும் குமரி முதல் இமயம் வரையுள்ள இந்திய மக்களின் இதயங்களை "இணைக்கும் இழை" என்பதைக் கண்டு வியனுலகம் வியந்து பாராட்டுகின்றது. விடுதலை பெற்ற பாரதம், ஜனநாயகப் பரீட்சையிலும் தேறிவிட்டது என்பதை இப்பொழுது மக்களிடையே ஏற்பட்டுள்ள எழுச்சியும், ஒன்றுபட்ட உணர்வும், துடிப்பும் உலகுக்கு உணர்த்தியுள்ளவை என்ருல் அது மிகையல்ல.

ஓராயிர வருடம் ஓய்ந்து கிடந்த பின்னர் வாராது போல வந்த சுதந்திர மாமணியைக் காத்து வளர்க்க மக்கள் எத்தகைய தியாகம் செய்வதற்கும் தயாராக இருக்க வேண்டும். பாரத நாட்டின் சுதந்திரத்துக்கும், ஜனநாயகத்துக்கும் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கும் செஞ்சீனுவின் படையெடுப்பால் ஏற்பட்டுள்ள ஆபத்தினை

ஜமாளிப்பதன் மூலம், இந்திய மக்கள் சீன ஏகாதிபத்திய வெறியர்களிடமிருந்து தங்களது நாட்டை மட்டுமின்றி உலக மனித இனத்தையும், ஜனநாயகத்தையும் காப்பாற்றுவதற்கான அரிய வாய்ப்பினைப் பெறுகின்றனர்.

விடுதலை அடைந்த பின்னர் உலகமே வியக்கும் வண்ணம் ஜனநாயக வழிமுறையிலே நம்நாட்டில் உருவாகி வரும் பிரம்மாண்டமான பொருளாதார சமுதாய வளர்ச்சி சீன சர்வாதிகாரிகளின் பொறுமைக்கு ஒரு காரணமாக இருக்கலாம். அண்டை நாடாகிய பாரதம் வளர்வதைச் சகிக்க இயலாத அந்த வண்கணாளர்கள் இந்த நாட்டின்மீது படையெடுத்து ஜனநாயகத்தை அழிப்பதுடன் பொருளாதார வளர்ச்சியையும் சீர்குலைத்து விடலாமென்று மனப்பால் குடிக்கின்றனர். உலகிலேயே பெரிய ஜனநாயக நாடாகிய இந்தியாவை விழுங்குவதன் மூலம், உலகத்தையே கட்டி ஆளுவதற்கான கனவு பலிக்குமென ஏகாதிபத்திய எண்ணம் படைத்த செஞ்சீனு எண்ணியிருக்கலாம். ஆகவே நாம் போரில் வெற்றிபெறுவதுடன், தாய்நாட்டின் பொருளாதார வளர்ச்சியும் தடைப்படாமல், தளர்ந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நமது புனிதக் கடமையாகும். அதற்கேற்ப முன்னிலும் பன்மடங்கு பாரத மக்க்ள் ஒன்றுபட்டு ஓயாது உழைத்தால்தான் இப்புனித முயற்சியில் வெற்றி காண முடியும்.

உழைப்பால் செல்வ வளத்தை உயர்த்துவதுடன் உபயோகத்தைக் குறைத்துக்கொண்டு சேமிப்பையும் பெருக்கியாக வேண்டும். அது தான் சுதந்திரத்தைக் காப்பதுடன், பொருளாதார மறுமலர்ச்சிக்கான பொன்னுன பாதையையும் வகுக்கும்.

சமாதானமே சமுதாய உய்வுக்கான வழி என்று அந்த சமாதானத்துக்காகவே உலகெலாம் உழைத்தும் வந்துள்ள பாரதத்திற்கு ஏற்பட்டுள்ள ஆபத்தான "சுதந்திரம், ஜனநாயகம், அமைதியான நல்வாழ்வு" என்ற அடிப்படை இலட்சியத்தை சர்வாதிகார, ஏகாதிபத்திய கொடுங்கோலர்

களிடமிருந்து காப்பாற்ற வேண்டுமானல் எத்துணை அளவு "விழிப்பும்" தியாக உணர்வும் தேவை என்பதற்குச் சரியான எடுத்துக்காட்டு, இந்த உண்மையை உலகமும் உணர்ந்து கொண்டுவிட்டது. ஆகவேதான் ஜனநாயக வாழ்வில் நம்பிக்கையுள்ளவர்களும், மனித இனம் வாழவேண்டும்—அதுவும் மானத்துடனும், உரிமையுடனும் வளரவேண்டும் என்று ஆசைப்படுகின்ற அத்தனை நாடுகளும் இன்று பாரத மக்களின் இந்த அறப்போருக்கு ஆதரவு தருகின்றனர்.

ஆம்; குவலயத்தின் கூறையாகிய இமயத்தின்மீது, கொடுமையுள்ளங்கொண்ட சீனர் வைத்திருக்கும் கொள்ளி உலக மனித இனத்தின் உரிமைக்கே விடப்பட்டுள்ள சவால் என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

"தர்ம சக்தி முதலில் தோல்வியுறுவது போலத் தோற்றமளித்தாலும், இறுதியில் அறமே வெல்லும்" என்ற விழுமிய உண்மையை பாரத, இராமாயண காலந்தொட்டு, இன்றுவரை குவலயம் கண்கூடாகக் கண்டு வருகின்றது. ஆகவே இந்த அறப்போரில் இந்திய மக்களாகிய நாம் பெருமைமிகு வெற்றிபெறப் போகின்றோம் என்பதில் ஐயமில்லை. அதற்கான உழைப்பையும், தியாக உணர்வையும் தான் இன்று நாடு நம்மிடமிருந்து எதிர்பார்க்கின்றது.

குறிப்பாக இளைஞர்களுக்கு இதில் தலையாய பொறுப்பு உண்டு. காரணம் அரசியல் விடுதலைக்காக காந்தியடிகள் தலைமையில் நமக்கு முந்தைய தலைமுறை நடத்திய சுதந்திரப் போரில் இன்றைய இளைஞர் சமுதாயம் பங்கு பெறுவதற்கான வாய்ப்பு அன்றில்லை. "தண்ணீர் விட்டோ வளர்த்தோம்? சர்வேசா...இப்பயிரைக் கண்ணீராற் காத்தோம். கருகத்திருவுளமோ?" என்று சொல்லிச் சென்றார் அமரகவி பாரதி. அத்தகைய சுதந்திரப் பயிரைக் காக்க இன்று செந்நீர் தேவை. அந்த விழுமிய வேள்வியை நம் வீரர் கூட்டம் இமாலயப் பகுதிகளில் செய்துகொண்டிருக்கிறது. அந்த அறத்தையும், சுதந்திரத்தையும் காக்கும் "புண்ணிய

வேள்வியில் பங்கு பெறுவதே இன்றைய இளைஞர் சமுதாயத்தின் பிறவிப் பயன்'' என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். தோள்வலி மிக்க இளைஞரெல்லாம் போர்ப் படையில் சேரவேண்டும். இந்தப் புனிதப் பணியைச் செய்வதன் மூலம் நாம் இறவாப் புகழை அடையப்போகின்றோம். பூவுலகைச் சர்வாதிகார சழக்கர்களிடமிருந்து காப்பாற்றிய பெரும் புகழை பாரதம் அடைந்தே தீரும் என்பதில் ஐயமில்லை; அறவேள்வியின் தலைவனும் பண்டித நேருவின் கழுத்தை ''வெற்றி மாலை'' அணி செய்யும் நாள் வெகு தூரத்தில் இல்லை. ஐயமுண்டு, பயமில்லை. வெற்றி நமதே. ஜெய்ஹிந்த்.

(வானொலியில் நிகழ்த்திய உரை)

## தலைவருக்கு அஞ்சலி

நேருஜி மறைந்துவிட்டார். நேர்மையின் சின்னம் மறைந்துவிட்டது. தாயை இழந்த சேய்போலத் தாய்த்திரு நாடு தவித்து நிற்கின்றது. நீதிக்காவலன் மறைந்துவிட்டானே என்று உலகத்தாய் நெஞ்சுருகிக் குருதிக்கண்ணீர் வடிக்கின்றாள்.

சோகத்தில் சூழ்ந்துள்ள நாட்டு மக்களுக்கு இது சோதனைக் காலம். நேருவைப் போன்ற பிறிதொரு தலைவன் இவ்வுலகம் இனி காணப்போவதில்லை; ஆனால் நேருஜி காலமெலாம் காத்து நின்ற இலட்சியங்களின் நெறி நடக்க நாடு கடமைப்பட்டிருக்கிறது.

தேசப்பிதா காந்திஜி தேசிய ஒற்றுமையை—ஒன்றுபட்ட இலட்சிய இந்தியாவைக் கருவிலே தந்தார். அதை உருவாக்கி, தாலாட்டி, சீருடன் காத்து வளர்க்கும் தாய்போல நின்றார் நேருஜி. தருமமே உருவான தாய், அன்பின் பெட்டகமாய்

நின்ற அந்த அன்னை மறைந்துவிட்டாள். தாய்க்கு நாம் செலுத்தும் அஞ்சலி எவ்வாறு இருத்தல் வேண்டும்? இதையே இன்று நாடு சிந்திக்கின்றது.

இந்த நாடு மன்னர்களையும் மகான்களையும் கண்டுள்ளது; அன்பின் தத்துவத்துக்கே இலக்கணமாய் அரசாண்ட அசோகப் பெரு மன்னனைப் பார்த்தது; அஹிம்சா தர்மத்தை நிலைக்களனாய்ப் பற்றி அரசியல் கண்ட மஹாத்மாவை இவ்வுலகக்கு ஈந்து உவந்த பெருமை இந்தியாவுக்கு உண்டு. ஆனால் மக்களாட்சியில் அன்பென்னும் கோலினையே செங்கோலாக்கி நாடு மட்டுமல்ல, நானிலத்தையே ஆண்ட பெருமை நேருஜிக்கு உண்டு. ஆகவே நேருஜி உலகத்தலைவர். அதனால்தான் பூமாதேவியே அதிர்ச்சியுற்று நிற்கிறாள்.

நேருஜி தந்த இதயக் கனிகள் நான்கு. ஜனநாயகம், வகுப்பு ஒற்றுமை, சமநீதி சமுதாயம், உலக சமாதானம்...... பாரத நாட்டு அரசியலில் ஜனநாயகத்துக்கான வித்தினை ஊன்றி, செடியையும் வளர்த்து அரும்பினையும் பார்த்துவிட்டார் மறைந்த மாமணி நேருஜி. ஆகவே அரும்பு நிலையில் நிற்கும் இந்திய ஜனநாயகம் காயாகிப் பின்னர் கனியாகி கோடிக்கணக்கான மக்களின் இதய தாகத்தினைத் தீர்த்து வைக்கும் அருங்கனியாக ஆகின்ற நாள் எந்நாளோ, அந்நாளே நேருஜியின் உண்மையான நினைவுப் பெருநாள். எனவே ஜனநாயகத்தின் முழு வெற்றிக்கு ஓயாது உழைப்பது தான் நேருஜிக்கு நாம் செலுத்தும் அஞ்சலி.

பாரதநாடு பல வகுப்பினரையும், பல்மொழிகளையும் கொண்ட பழம்பெரும் நாடு. ஆகவே நாடு உய்வுறுவதற்கான ஒரே வழி வகுப்பு ஒற்றுமை. இதுவே அவரது இதய ஜோதி. வகுப்பு ஒற்றுமைக்காகவே மகாத்மாஜி உயிரையும் ஈந்தார்; அண்ணல் வழி நின்ற ஆசிய ஜோதியும் இறுதி மூச்சு வரை வகுப்பு ஒற்றுமைக்காக அயராது உழைத்தார். குறிப்பாக சிறுபான்மையாக உள்ள சமுதாயங்களை அவர் காத்து நின்ற தருமநெறி ஊழி ஊழிக்காலம் உலகத்துக்கே

ஒரு எடுத்துக்காட்டாகும்; சிறுபான்மைப் பிரச்னைகள் உலகில் எங்கு தோன்றினாலும் அவற்றுக்கெல்லாம் தீர்வு காணும் வேத நெறியாக பண்டித நேருவின் பாதை விளங்கியது; வையகத்தில் வருங்கால வரலாறு இதை உணர்ந்தே தீரும். ஆகவே, நேருஜியின் நேர்மைக் கனியாய் விளங்கிய வகுப்பு ஒற்றுமையை நாளும் காப்பதே நாட்டவர் செலுத்தும் நல்ல அஞ்சலி.

நேருஜி நீதிதேவனின் மறு அவதாரம். ஆகவே, அவரது இதய அருள் நீதிப்பெருக்கினை நிரம்பக் கொடுத்துள்ளது: எல்லாத் துறைகளிலும் நீதி கோலோச்ச வேண்டும் என்று ஆசைப்பட்டு, அதற்காகவே உழைத்தார். குறிப்பாக பொருளாதாரத் துறையில் இருந்துவரும் அளவுக்கு மீறிய ஏற்றத் தாழ்வினைப் போக்கி, எல்லோருக்கும் வாழ்வதற்கு—வளர்வதற்குச் சமவாய்ப்பு வழங்கும் சமுதாயத்தைக் காண விழைந்தார்; இரக்கத்தின் ஊற்றுப் பெருக்கினை அவரது இதயம் உள்ளடக்கி நின்றது; ஆகவேதான் ஏழ்மை கண்டு இரங்கிய அவரது நெஞ்சம், வறுமையின் கொடுமையினின்றும் மக்களைக் காப்பதற்கான வழி வகைகளைக் கண்டது; திட்டங்கள் படைத்தது; திட்டங்களைத் திறம்படச் செயல்படுத்துவதன் மூலம் செல்வ வளம் பெருக்கி,சமுதாயம், சமநீதி வழியே முன்னேற வேண்டும் என்று துடியாய் துடித்தது அவரது தூய நெஞ்சம்; இந்த இலட்சியம் ஈடேற உழைப்பதே பீடுடைய அந்தப் பெருமானுக்கு நாம் செலுத்தும் அஞ்சலி.

உலக சமாதானம் அவரது உயிர்மூச்சு, அதற்காகவே வாழ்ந்தார்—உழைத்தார். பாரினில் போர்கள் இன்றிப் பல்லாண்டுகாத்தார்; அவர் கையாண்ட நடுநிலைக் கொள்கை நானிலத்தின் போர் என்ற காரிருள் கல்லாது காத்து நின்ற நந்தா விளக்கு. அந்த விளக்கு அணையாது ஒளிப்பிழம்பாய் உலகுக்கு வழிகாட்ட உழைப்பதே உலகும் நாமும் தெய்வத் திருமகனும் நேருஜிக்குச் செலுத்தும் நன்மரியாதை.

நேருஜியின் இந்த உயர்ந்த இலட்சியங்களை இந்திய மக்களாகிய நாம் நம் இதயங்களிலெல்லாம் அன்பெனும் கோலால், அறிவெனும் மை கொண்டு எழுதி நிற்போம். நேருஜி கண்ட நெறி நின்று நாடு காத்து நிற்போம். ஜெய் ஹிந்த்!

(வானொலியில் நிகழ்த்திய உரை)

## சங்கம் வளர்த்த மதுரையிலே சங்கநாதம்!

ஜூலை 24. மதுரை மாநகரமே ஒரே திருவிழாக் கோலம்! திரும்பும் திக்கெல்லாம் கண்ணைப் பறிக்கும் வண்ணத் தோரணங்கள்! மூலை முடுக்கெல்லாம் மூவர்ணக் கொடிகள். மதுரை நகர் வந்த நல்லோரை எல்லாம் "வாருங்கள்! வாருங்கள்!" என்று வரவேற்பது போன்று தென்றலூடே தவழ்ந்து பறந்த கண்கொள்ளாக் காட்சி.

அன்று காலை 6 மணி முதலே மக்கள் சமுத்திரம் மதுரை புகைவண்டி நிலையத்தை மொய்த்து நின்றது. தமிழ் நாடு கண்ட தண்டமிழ்த் தலைவர் ஓ. வி. அளகேசன் அவர் களும், தவச் செல்வர் முதலமைச்சர் அவர்களும் வருகை தந்த புகைவண்டி, நிலையத்தை வந்தடைந்ததுதான் தாமதம்; பூமாரி பொழிந்தது. ரயில்வே நிலையத்திலிருந்து, சங்கம் வைத்துச் செந்தமிழ் வளர்த்த மதுரை நகரின் தெருக் களிலே, தலைவர்கள் ஓ. வி. அளகேசன் அவர்களும், முத லமைச்சர் அவர்களும் திறந்த காரில் பவனியாக வந்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. "ஏழை மக்களின் ஏற்றத்துக்கு உழைக்கும் ஏந்தல்களே! வருக! வருக!" என மக்கள் கூறிய வாழ்த்தொலி விண்ணைப்பிளந்த தெனலாம்.

காலை 9 மணி. த. நா. காங். காரியக்குழு, தலைவர் ஓ. வி. அளகேசன் அவர்கள் தலைமையில் கூடியது. நாட்டு மக்களின் இன்னலைத் துடைத்து இடர்ப்பாட்டை நீக்கி, இன்ப புரியாக நாட்டினை உருவாக்குவது எப்படி என்று சிந்தனைச்

செல்வங்கள் கலந்தாலோசித்தனர். ஏழு தீர்மானங்களை நிறைவேற்றினர் என்றால் ஏழும் நாட்டு மக்களின் இன்றைய நிலையை எடுத்துக்காட்டும் கண்ணாடி போன்று விளங்கின. நாட்டு மக்களின் நாளைய நல்வாழ்வுக்கு நல்வழிகாட்டியாக விளங்கின.

பொதுச்சபை பத்து மணிக்குக் கூடியது. தமிழ்நாடு முழுவதிலிருந்தும் வந்திருந்த பிரதேச காங்கிரஸ் உறுப்பினர்கள் சட்டமன்றஉறுப்பினர்கள் போன்றோர் அணி அணியாக அமர்ந்திருந்தனர்.

முதலில் மறைந்த மாவீரர்களுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் ஐந்து நிமிடம் மௌனம். பின்னர் த. நா. கா. தலைவர் அவர்கள் ஆரவாரத்திடையே எழுந்து மகாசபை நிகழ்ச்சிக்கான தலைமைச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள். அமைதியான பேச்சு. ஆனால் ஆழ்ந்த கருத்தோட்டம். வரலாற்றுக் காவியங்கள் இசைபாடும் வான்புகழ் கொண்ட ஊர் மதுரை என்று குறிப்பிட்டு, அத்தகைய ஆன்மீக அரசியல் சிறப்புடை மதுரை மாநகரில் கூடும் காங்கிரஸ் திட்டமிட்டுச் செயலாற்றும் காலம் வந்துவிட்டதென்று கூறி, ஊக்கமுடன் உழைப்போம் வாரீர்! என்று அறைகூவல் விடுத்தார்கள்.

நாட்டு நிலைமையை நன்கு ஆராய்ந்து பேசுகையில் அண்டை நாடுகளின் நிலையற்ற அரசியல் வாழ்வை நினைத்தபடி, நாம் காணும் நல்வாழ்வைச் சுட்டிக்காட்டி, இருப்பினும் வட எல்லையில் தொல்லை ஏற்பட்டிருப்பதைக் குறிப்பிட்டு, நாட்டு சுதந்திரத்தைக் காக்க எல்லா நடவடிக்கைகளையும் நாம் எடுப்போம், வல்லமை மிக்க ஆயுதப் பெருக்கம் வளர்ந்து வரும் இக்காலத்தில் எங்கோ ஆபத்து! என்று வாளாவிருக்கக் கூடாது என்று நாட்டு மக்களை எச்சரித்தார்கள்.

இந்நிலையிலும் நாம் காணும், வெளிநாட்டுக் கொள்கைதான் போரினின்றும் பாரினைக் காக்க உதவும். நம்முடைய

கொள்கைச் சிறப்பினைத்தான் ஜப்பானிலே நிகழ்ந்த ஆர்ப் பாட்ட நிகழ்ச்சி போன்றவை தெற்றெனக் காட்டுகின்ற தெனக் குறிப்பிட்டார்கள்.

அன்னியர் ஆபத்துக்கிடையே அயராது, அஞ்சாது, எதையும் சமாளித்து, இரண்டாவது, மூன்றாவது, ஐந் தாண்டு திட்டங்களின் வெற்றிக்கும் வழி காண வேண்டிய சோதனைக் கட்டத்தில் உள்ளோம்.

இருப்பினும் சோர்வுறாது உழைப்போம்; சுக வாழ்வை மக்களுக்கு அளிப்போம் என்று சூளுரை கூறினார்கள்.

எல்லையிலோ அன்னியனின் உருட்டல்! உள்ளேயோ பொறுப்பற்ற கட்சிகளின் ஓயாத மிரட்டல் என்றுகூறிக் குறிப் பாக மத்திய அரசின் ஊழியர்களின் வேலை நிறுத்தத்தை வருத்தத்துடன் குறிப்பிட்டு, இதுபோன்ற பொறுப்பற்ற தன்மையை மாற்று நாடுகளில் பார்க்க முடிகிறதா என்று கேள்வி கேட்டு, வந்திருந்தோரின் சிந்தனையைத் தூண்டினார். வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிட்ட "தூண்களே" மறைந்து போகும் வெட்கக் கேட்டினை குறிப்பிட்டவுடன் அவையில் ஆரவாரம் எழுந்தது. இருப்பினும் பெரும்பாலான ஊழியர் கள் பொறுப்புணர்ச்சியுடனும், நாட்டுப்பற்றுடனும் நடந்து கொண்டமைக்காக அவர்களைப் பாராட்டினார்கள். வேலை நிறுத்தத்தின் மூலம் நாட்டின் பொது வாழ்வையே ஸ்தம் பிக்கச் செய்ய ஒரு சில கட்சிகள் செய்த சூழ்ச்சிகளை முறி யடிக்க உதவிய காங்கிரஸ் ஊழியர்களையும், மக்கள் சக்தி யையும் பாராட்டினார்.

மொழிப் பிரச்னை குறித்துப் பேசுகையில் அவரவர்க்கும் அவரவரது தாய்மொழி மீது அன்பு உண்டு, மொழி அன்பை பெருக்க உதவும் கருவியே ஒழிய அதைக்கொண்டு வம்பை வளர்ப்பது இழிவுடைச் செயல் என்பதை இடித்துக்காட்டி னார். அண்மையில் நிகழ்ந்த அஸ்ஸாம் மொழிக் கலவரமே இதன் ஆபத்தினை நாட்டு மக்களுக்கு நன்கு உணர்த்துகிறது. மேலும் மொழியின் சீரான வளர்ச்சிக்குச் சிறந்த தொண்டு

ஆற்றியது காங்கிரஸேயன்றி இன்று மொழியின் பேரால் வெறுப்பையும், வெறியையும், தூண்டும் திராவிட முன் னேற்றக் கழகத்தினர் போன்ற பிற்போக்குச் சக்திகள் அல்ல என்பதை ஆணித்தரமாக எடுத்துரைத்தார்கள்.

தமிழ் மக்களின் தவப்பயனுய் கிடைத்துள்ள நல்லாட் சியைக் காக்க வேண்டிய பொறுப்பு நாட்டு மக்களேச் சார்ந் தது என்று கூறி உரையை முடித்தார்கள்.

பின்னர் மூன்ருவது ஐந்தாண்டு திட்டத் தீர்மானத்தை சென்னே முன்னுள் மேயர் திரு. டி. செங்கல்வராயன் அவர்கள் முன் மொழிந்து பேசுகையில், திட்டமிட்ட பொருளாதாரம் தான் மக்களின் பிரச்னேக்குத் தீர்வுகாண முடியும் என்பதைத் தெளிவாகக் கண்டு, அதன்படியே முதலாவது திட்டம் மக்களின் உணவுப் பிரச்னேயைத் தீர்ப்பதற்காக அடிப்படை யில் அமைந்திருந்தது. வீணுகும் நீரை விளேச்சலுக்குப் பயன் படுத்துவதற்கான நீர்ப்பாசனத் திட்டங்கள் போடப்பட் டன.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நாட்டின் கனரகத் தொழிற்சாலேகளின் வளர்ச்சிக்கு நல்ல வழி காட்டியது. தேசிய வருமானமும் கணிசமான அளவு உயர்ந்தது. இரண் டாவது திட்டம் "காகிதத் திட்டம்" என்று திண்ணே ஜோசியம் கூறியோர் பலருண்டு. ஆயினும் திட்டத்தின் இன்றைய வெற்றி அவர்களின் கண்களேத் திறந்திருக் கின்றன. இரும்பு, எஃகுத் தொழில் வளர்ச்சிக்கு அடித்தள மிட்ட திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களே இடையே பாராட்டிப் பேசினுர்.

வெளிநாட்டுச் செலாவணிக் கஷ்டம் போன்றவை இருந்தாலும் மூன்ருவது திட்டம் நன்முறையில் நிறைவேற மக்களின் ஒத்துழைப்பு தேவை. மக்கள் சக்தியை ஆக்கத் துறைக்கு அழைத்துச் செல்லுவதுதான்] நம்முடைய மகத் தான பணி என்று கூறினுர்.

அதே நேரத்தில் தொழிற்துறையில் பின்தங்கியுள்ள பகுதிகளில் முதற் கவனம் செலுத்த வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டுவதுதான் இத்தீர்மானத்தின் நோக்கம் என்று கூறி உரையை முடித்தார்.

தீர்மானத்தை வழிமொழிந்த த. நா. கா. க. காரியதரிசி திரு ஆர். கிருஷ்ணசாமி நாயுடு எம். எல். ஏ. பேசுகையில் இன்னலுக்கும், இடர்ப்பாட்டுக்கும் இடையே சிக்கித்தவித்த விவசாயி இன்றுதான் நல்வாழ்வினைச் சுவைக்க ஆரம்பித்திருக்கிருன். பட்டி தொட்டிக்கெல்லாம் பாட்டை போடப்பட்டு வருகின்றது. குக்கிராமங்கள் கூட மின்சார வசதி பெற்று வருகின்றன, ஆம், காந்திஜி கண்ட கிராம மறுமலர்ச்சி சமுதாயம் உருவாகி வருகிறது. ஏக்கரா நிலத்துக்கு எழுநூற்றைம்பது ருபாய் வீதம் கிணறு வெட்ட காங்கிரஸ் ஆட்சிதான் மான்யம் அளிக்க முடிந்ததேயன்றி, வரட்டுவாதம் பேசக் கூடிய மாற்றுக் கட்சிகள் அல்ல. அன்று திட்டத்தைப் பழித்துரைத்த கம்யூனிஸ்டுகளே இன்று பாராட்டுகின்றனர் என்ருல் இதைவிடத் திட்டத்தின் வெற்றிக்குச் சான்று என்ன தேவை என்று வினவினுர்.

மாநிலத்தில் மேழிச் செல்வம் பெருக உதவ வேண்டிய பொறுப்பு இன்னும் மத்திய அரசுக்கு உண்டு. குறிப்பாக பரம்பிக்குளம் போன்று மற்ற ராஜ்யங்களோடு பேர்ப் பங்கீடு செய்துகொண்டு, நிலவளத்தை பெருக்க, வேண்டிய உதவி புரியவேண்டுமென்று குறிப்பிட்டார்.

தீர்மானத்தின்மீது சேலம் திரு. ஏ. சுப்ரமண்யம் பேசுகையில், நூற்றுக்குத் தொண்ணூறு பேராக உள்ள உழவர்களுக்கு மாத ஊதியமாக ரு. 60/- கூட கிடைப்பதில்லை. இந்த வேளையில் மாதம் 200, 300 என்று ஊதியம் பெறும் அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்கிருர்கள். இந்த வேலை நிறுத்தம் முறையானதுதாஞ என்பதைச் சிந்திக்க வேண்டும்.

சென்னை அரசு, கிராமங்கள் தோறும், மின்சார வசதியும், உழவர்களுக்குத் தேவையான விவசாயக் கருவிகளை வழங்கியும் உதவியும் வருகிறது. ஏழைக் குழந்தைகளுக்கு இலவசக் கல்வி அளிக்கிறது. காங்கிரஸ் அரசாங்கம் என்ன சாதித்துவிட்டது என்று கூறுபவர்கள் இந்தச் சாதனைகளைச் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்றார்.

சென்னை சட்டமன்ற உறுப்பினர் திருமதி. குழந்தையம்மாள் பேசுகையுல், "நீர் வளம் குறைந்துள்ள நிலத்தைக் கொண்டிருப்பவர்களுக்குக் கிணறுகள் வெட்டுவதற்காக ரூ. 2000/- வரை அரசாங்கம் கடன் உதவி செய்திருக்கிறது. இந்தத் தொகையை ரூ. 3000/- ஆக உயர்த்த வேண்டும்" என்று குறிப்பிட்டார்.

"இந்தியாவின் முன்னேற்றத்திற்காக நாம் எல்லோரும் கடுமையாக உழைக்க வேண்டும் என்று திரு. நாகராஜ மணியக்காரர் எம். எல். ஏ. அவர்களும், திருவாளர்கள் பழனியப்பன், ஏ. வி. திருப்பதி ஆகியோரும் ஐந்தாண்டு திட்டத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசுகையில் குறிப்பிட்டனர். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

சீன ஆக்கிரமிப்பைக் கண்டித்துக்கொண்டு வரப்பட்ட தீர்மானத்தை முன்மொழிந்து திரு. ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் பேசினார்.

"2000 ஆண்டுகளாக பிணக்கின்றி இருந்த நாடுகளிடையேயும், மனக்கசப்பு தற்போது ஏற்பட்டுள்ளது. இந்த 2000 ஆண்டில் இந்தியாவைத் தவிர தங்கள் நாட்டைச் சுற்றியுள்ள, நாடுகள் அனைத்துடனும், அவர்கள் சண்டையிட்டுக்கொண்டே வந்துள்ளார்கள்.

சுதந்திரத்திற்குப்பின் பாண்டுங் மாநாட்டினல் இந்திய-சீன நல்லுறவு பலப்பட்டது. ஆனால் கடந்த சில ஆண்டுகளாக துரதிர்ஷ்டவசமாக இந்தியப் பகுதியை சீனர் ஆக்ரமித்து வந்துள்ளனர். சுதந்திரத்துக்கே சவாலாக இருக்கும் இந்தப் பிரச்னையை எதிர்க்கட்சிகள் பொறுப்பற்ற முறையில் நோக்குகின்றன.

தேர்தல் முறை மூலம் ஆட்சிக்கு வர கம்யூனிஸ்டுகளை மக்கள் அனுமதிக்க மாட்டார்கள், என்பதை உணர்ந்து கொண்டுள்ள, இந்தியக் கம்யூனிஸ்டுகள், சீனத்துக்காரரை ஆதரித்தாவது பதவிக்கு வர இயலாதா என்று முயற்சி செய்து கொண்டிருக்கின்றனர். சொந்த நாட்டையே சீனருக்குக் காட்டிக்கொடுக்க அவர்கள் முயலுகின்றனர் என்பதை அவர்களது சமீபகால நடவடிக்கைகள் காட்டுகின்றன.

அதே சமயத்தில் இதையே சாக்காக வைத்துக்கொண்டு ஏன் அமெரிக்காவுடன் நாம் சேர்ந்துகொள்ளக்கூடாது என்று ராஜாஜி போன்றவர்கள் கூக்குரல் போட்டு வருகின்றனர்.

இத்தகைய வம்பில் விழாது, நடுநிலைக் கொள்கை மூலமும், நம் சொந்த பலத்தைப் பெருக்கிக் கொள்வதன் மூலமும்தான், அமைதியைக் காத்து அன்னியரையும் விரட்ட முடியும் என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும் என்று திரு. ஆர். வி. எஸ். அவர்கள் குறிப்பிட்டார்கள்.

தீர்மானத்தை வழிமொழிந்து நிதியமைச்சர் திரு. சி. சுப்ரமண்யம் அவர்கள் பேசினர்.

மக்கள் எண்ணிக்கையைப் பொறுத்தமட்டிலும், உலகிலேயே சீனவும், இந்தியாவும்தான் பெரிய நாடுகள். ஆனல், மக்களாட்சி வழியே நாம் ஆட்சி செலுத்துகிறோம். அங்கே சர்வாதிகார வழியே ஆட்சி செலுத்துகிறது.

பின்னடைந்த நாடுகளின் வளாச்சிக்கான ஒரே வழி கம்யூனிசப் பொருளாதார சித்தாந்தம்தான் என்பது அவர்களது வாதம். ஆனல் ஜனநாயக முறையிலே திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியை எட்டிப் பிடித்துவிட்டோம். ஆகவே கம்யூனிசப் பொருளாதாரக் கொள்கை இதன்மூலம் தோல்வி அடைந்துவிடும். இன்று இந்தியாவுக்கும், சீனவுக்கும் ஏற்பட்டுள்ள நெருக்கடி பொருளாதாரக் கொள்கைப் போட்டியாகும்.

சீன ஆதிக்கத்திற்குக் காரணம் என்ன? அவர்கள் ஆதிக்கம் புரிந்துள்ள பகுதிகள் வாழ முடியாத பகுதிகளாக இருந்தும் ஆக்கிரமிப்பு ஏன்? கொள்கை மோதலே காரண மாகும். பொருளாதார வளர்ச்சிக்குச் செலவிடும் மனிதசக்தி, கோடிக்கணக்கான ரூபாய் எல்லாம் ராணுவத்திற்குச் செல விட்டு நமது பொருளாதாரத் துறையில் பலக்குறைவு ஏற் படச் செய்ய வேண்டும் என்பதே சீனுவின் நோக்கம்.

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியினர் இதில் நடந்து கொள்ளும் முறை, வேதனை தரத்தக்கதாய் உள்ளது. அவர்களுக்குப் பொதுவுடைமை வாதமே பெரிது; நாடு பெரி தல்ல.

தன்னுடைய சொந்த வலிமையில் இந்தியக் கம்யூனிஸ்டு களுக்கு நம்பிக்கை இல்லை. இதனுல் சீனுவின் துணைகொண்டு இந்தியாவைப் பிடித்துவிட்டால், தம்மிடம் இந்தியாவின் ஆட்சி கிடைத்துவிடும். என்று இந்தியக் கம்யூனிஸ்டுகள் நம்புகின்றனர் என்று எண்ணத் தோன்றுகிறது.

வெளிப்பகையை நம்பிவிடலாம். அதனுல் பெருங்கேடு விளையாது. ஆனுல் உட்பகை பெருங்கேட்டினை விளைவிக்கும். நம் ரத்தத்தை உறிஞ்சி, ஆளே இல்லாமல் செய்துவிடும். ஆகவே சீனுவுக்கு ஆதரவு கொடுத்துவரும் ஒரே கட்சியாகிய இந்தக் கம்யூனிஸ்டுகளுக்கு இடம் கொடுக்கவே கூடாது. வேறு எக்கட்சிக்கு ஆதரவு கொடுத்தாலும், இத்தகைய ஆபத்து நிகழப்போவதில்லை.

சீன ஆதிக்கத்தை அனுமதித்தோமென்ருல், உரிமை இழந்து அடிமைகளாக வாழ நேரிடும் என்பதை மக்கள் மறக்க முடியாது என்று கூறினுர்கள்.

மீண்டும் பிற்பகலில் கூடிய த. நா. காங்கிரஸ், மொழித் தீர்மானத்தை நிறைவேற்றியது. மொழிக் கிளர்ச்சி பற்றிய

தீர்மானத்தை முன்மொழிந்து த. நா. கா. க. காரியதரிசி திரு. எஸ். என். ஏ. அஜீஸ் பேசினர்:

நாட்டில் பல்வேறு மொழிகள் உள்ளன. ஆனால் எல்லோரையும் இணைக்கக்கூடிய மொழி ஒன்று தேவை. ஆகவே இந்தி இணைப்பு மொழியாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. இந்தி தெரியாதவர்களின் நலனுக்காக ஆங்கில மும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

தவிர, பிரதேச மொழி வளர்ச்சியில் காங்கிரஸ் என்றுமே முன்நின்று உழைத்து வருகிறது.

மாற்றுக் கட்சிகள் மனத்தால் நினைத்துப் பார்ப்பதற்கு முன்னரே, முத்தமிழ் வளர்ச்சிக்குக் காங்கிரஸ் பாடுபட்டு வந்திருக்கிறது. ஆங்கிலேய ஆட்சிக்கும், அவர்களது மொழிக்கும் என்றுமே ஜஸ்டிஸ் கட்சியினர் ஆதர வாளர்களாக இருந்து வந்துள்ளனர். ஆனல் தமிழ் வளர்ச்சிக்கு அவர்கள் என்றுமே தடைக்கல்லாகத்தான் இருந்தனர். கழகத்தினர் இன்று மொழிப்பற்று என்று சொல்வதெல்லாம் வெறும் நடிப்பு.

மொழியின் பேரால் வெறுப்பையும், குழப்பத்தையும் உருவாக்கி, நாட்டின் நல்லாட்சிக்கு ஊறு விளைவிக்க வேண்டு மென்பதுதான் இவர்களின் சூழ்ச்சி. ஆனல், ஆட்சி மொழி யாக அருந்தமிழை ஆக்கியதன் மூலம், கோலோச்சும் அரசி யாக தமிழ்த் தாயைக் கொலு வீற்கச்செய்த பெருமை காங்கிரஸுக்குத்தான் உண்டு என்பதை நாட்டு மக்கள் நன்குணர்வர் என்று கூறி, மொழி வெறியைத் தூண்டிவரும் பிற்போக்குச் சக்திகளை அஜீஸ் சாடினர்.

தீர்மானத்தை வழிமொழிந்து பேசிய காஞ்சி. திரு. சி. ஆர். உமாபதி அவர்கள் இன்று மொழிப்பற்று என்ற போர் வையில் முன்னேற்றக் கழகத்தினர் புரிந்துவரும் பொல்லாங் கினையும், பித்தலாட்டத்தையும், வெளிப்படுத்தினர்.

என்றுமே தேசத்துரோகத்தில் உழன்றுவரும் முன்னேற்றக் கழகத்தினர் நாட்டு மக்களின் நல்வாழ்வுக்கான பாதை வகுக்கும் பொழுதுமா 'மக்கள் விரோதச் செயல்களில் ஈடுபட்டு' தங்களைப் பரம்பரைத் தேச விரோதிகளாகக் காட்டிக்கொள்ள வேண்டும் என்று வினவினர்.

மொழி பற்றிய தீர்மானத்தில் பேசிய நிதி அமைச்சர் அவர்கள், நல்ல பல கருத்துக்களை அள்ளிக்கொடுத்தார்கள். இத்தீர்மானம் சாதாரணமாக இங்கு வரவேண்டியதில்லை. ஆனால் தி. மு. க. வினர் ஏதோ தமிழுக்கு ஆபத்து நேர்ந்து விட்டதாகவும், அதற்காக ஒரு கிளர்ச்சி நடத்தப்போவ தாகவும் கூறுவது மக்களிடையே ஒரு குழப்பத்தை ஏற்படுத்தி உள்ளது என்றும் கூறினர்.

மொழி என்பது மக்களை ஒன்றுபடுத்தும் சக்தியாக இருக்கிறது. தாய் மொழியின்பால் கொள்ளும் அன்பு சில சமயம் வெறியாக மாறி, மற்றொன்றின் மேல் வெறுப்பை ஏற்படுத்தி விடுகின்றது. ஆம்...அதுதான் இன்று நிகழ்ந் துள்ளது. தாய்மொழி அன்புக்கு மாறாக தாய்மொழி வெறியாகி வருகிறது.

தி. மு. க. வினர் இன்று இந்தி வெறிக் கிளர்ச்சியை ஏற்படுத்தி, சரிந்துவரும் தங்கள் கட்சிக்குச் செல்வாக்கு தேட முயன்று வருகின்றனர். இன்று இந்தியாவில் 14 மொழிகளைத் தேசிய மொழிகளாகச் சட்ட பூர்வமாக ஏற்றுள்ளோம். அதில் இந்தியும் ஒன்று.

எனவே, இன்று இந்தியாவில் தனித் தேசியமொழி ஒன்று கிடையாது. எல்லா மொழிகளும் தேசீய மொழிகள். அவை களுக்குச் சம அந்தஸ்து அளிக்கப்பட்டுள்ளது.

இன்று தமிழகத்தில் ஆட்சிமொழியாக மட்டுமின்றி பள்ளிக்கூடங்களிலும் தமிழ் போதனை மொழியாக சட்ட

பூர்வமாக ஆக்கப்பட்டிருக்கிறது. இந்த முடிவில் யாரும் குறுக்கிட அதிகாரம் கிடையாது. இந்தப் பொறுப்பும் அதிகாரமும் சென்னை சட்டசபைக்குத்தான். தி.மு.க. புரிந்து கொள்ள வேண்டும், என்று தெளிவாக, ஆணித்தரமாக எடுத்துச் சொன்னது தி.மு.க.வின் அறியாமைக்கு ஆப்பு வைப்பது போன்றிருந்தது. இன்று பட்ஜெட்கூடத் தமிழிலேயே வெளி வருகிறது என்றால், இதைவிட வேறு புரட்சிமிக்கது ஏதாவது உண்டா என்று அவர் வினவினார். இன்று தமிழில் எழுதி ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் மாறுதலை அடைந்திருக்கிறோம். எனவே ஒரு சிறிதளவுக்குக் கூட இந்திக்கு இடமில்லை என்பது தெளிவாகிறது. ஆகவே, கல்வி, சட்டசபை, நிர்வாகம் ஆகிய மூன்று துறைகளிலும் இந்தி புகுவதற்கு இடமே இல்லை. நீதித் துறையில் மொழிக் கமிஷன் இந்தியை ஐகோர்ட்டு மொழியாக்க வேண்டுமென்று கூறியுள்ளதை நாம் ஏற்றுக்கொள்ளவில்லை. இதை முடிவு செய்யும் அதிகாரமும் நம்மிடமுள்ளது. எனவே தமிழின் இடம் பறிபோகிறது என்பது வெறும் ஏமாற்றுதல் அல்லது அறியாமையே. அகில இந்திய ரீதியில் பார்த்தாலுங்கூட இந்தியுடன் ஆங்கிலமும் 1965-க்குப் பின்னும் மத்திய ஆட்சி மொழியாக இருக்க வேண்டுமென்ற நம் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. எனவே இவர்கள் கிளர்ச்சி அரசியல் நோக்குடன்தான் என்பதில் சந்தேகமில்லை.

இந்த மொழிப்பிரச்னை என்பது அவர்கள் நாட்டுப் பிரிவினை நோக்கத்தைக் கொண்டிருக்கிறது. ஆனால் நாட்டுப் பிரிவினை அடிப்படை வெளிப்படையாக வரட்டுமே, முன்னேற்றக் கழகத்தினர் தேர்தலில் நிற்கட்டுமே என்று சவால் விடுத்தவுடன் அவையில் இடி முழக்கம்போன்ற ஆரவாரம் எழுந்தது.

எனவே இந்த விஷப் பரிட்சையில் இறங்க வேண்டாமென்று மாற்றுக் கட்சியினருக்கு அவர் அறிவுரை பகன்றார்.

பின்னர் நிலச்சீர்திருத்தம் பற்றிய தீர்மானத்தை தஞ்சை மாவட்ட பெருநிலக்கிழார் திரு. என். எஸ். இராம லிங்கம் எம். எல். ஏ. முன்மொழிந்து பேசுகையில், "சமுதாய நீதியை நிலை நாட்டவும், ஏற்ற தாழ்வினைக் குறைக்கவும் நிலச்சீர்திருத்தச் சட்டம் கொண்டுவரப் பட்டிருப்பதாகக் குறிப்பிட்டார்கள்.

வழிமொழிந்து பூண்டி பெருநிலக்கிழார் திரு. ஏ. கிருஷ்ணசாமி வாண்டையார் எம். எல். சி. அவர்கள் பேசியது சிறப்புக்குச் சிகரமாக அமைந்தது. நிலச்சீர்திருத்தத்தால் மிகவும் பாதிக்கப்பட்டுள்ள பெருநிலக் கிழார்களே கொள்கைகளைத் தியாகம் செய்தது மட்டுமின்றி அதை மற்றவர்களும் உணர்ந்து நாட்டு நலனே தன் நலனைக் காட்டிலும் உயர்ந்தது என்ற கொள்கைக்கு உரமூட்டுவதாக அமைந்தது அவர்கள் அளித்த ஆதரவு.

திரு. வாண்டையார் பேசுகையில் நிலச் சீர்திருத்தத்தை ஆதரிக்காவிடில் கொள்கைப்படி காங்கிரசில் இடமில்லை என்று கூறி, இலட்சியமும், மக்களின் நல்வாழ்வும்தான் உண்மையான நாட்டுப்பற்றுள்ளவனின் இரு கண்கள் போன்று இருக்க வேண்டும் என்று உருக்கமாக வேண்டினார். முற்போக்கான நிலச் சட்டத்தை ஒரு சிலர் எதிர்க்க முயன்றாலும் அவர்களின் எதிர்ப்பு பலன் அளிக்காது என்றும் கூறினார். எனவே மிராசுதார்கள் காலத்தின் நிலைமை உணர்ந்து தங்கள் போக்கினையும் சமுதாய நலனுக்காக மாற்றிக் கொள்ள வேண்டும் என்று குறிப்பிட்டார். கூட்டுறவு விவசாயத்தின் நன்மைகளையும் அவர் விளக்கினார்.

மராமத்து அமைச்சர் திரு. பி. கக்கன் அவர்கள் பேசுகையில் நிலச்சீர்திருத்தம் காங்கிரஸ் ஸ்தாபனம் செய்த பெரும்புரட்சி என்று குறிப்பிட்டார். நிலத்திற்கு உச்ச வரம்பு விதித்திருப்பதன் நோக்கத்தை மக்களிடத்தில் நன்றாக எடுத்துக்கூற வேண்டும்.

தேவைக்கு அதிகமாக யார் நிலம் வைத்திருந்தாலும், அவர்கள் சமூகத்தின் விரோதிகளாவார். ஆகவே ஏழைகளின் கட்சியாகிய காங்கிரஸ் இந்தச் சிக்கலில் நல்லதோர் முடிவை எடுக்க வேண்டியதாயிற்று என்று கூறினர்.

மாயூரம் திரு. ஜி. நாராயணசாமி நாயுடு எம். எல். ஏ. பேசுகையில் ஏழை பணக்காரரர்களின் பாகுபாடு இல்லாத ஒரு சமுதாயத்தை நிர்மாணிக்கும் ஒரு பொறுப்பைக் காங்கிரஸ் மேற்கொண்டிருக்கிறது என்றும், நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுப்பதற்கு, நிலச்சீர்திருத்தச் சட்டம் துணைபுரியும் என்று கூறினர்.

சென்னை சட்டமன்ற உறுப்பினர் திரு. ஏ. எஸ். சுப்பராஜும் தீர்மானத்தை ஆதரித்துப் பேசினர்.

இந்திய அரசாங்க ஊழியர்கள் வேலை நிறுத்தம் பற்றிய தீர்மானத்தைச் சட்டமன்ற உறுப்பினர் கருத்திருமன் முன் மொழிந்தார். அவர் பேசுகையில் தங்கள் செல்வாக்கை அதிகரித்துக்கொள்வதற்காக, இந்திய அரசாங்க ஊழியர்களை வேலை நிறுத்தம் செய்யுமாறு சில எதிர்க்கட்சிகாரர்கள் தூண்டிவிட்டனர். அதன் பலனை இப்பொழுது அரசாங்க ஊழியர்கள் அனுபவித்து வருகிறார்கள். இது போன்ற தவறு இனி நிகழவிடக்கூடாது என்று கூறினர்.

திரு. என். ஆர். தியாகராஜன் எம். எல். ஏ. அவர்கள் வழிமொழிந்து பேசுகையில், பொறுப்பற்றோரின் தூண்டுதலுக்கு ஊழியர்களில் சிலர், பலியாகி உள்ளனர் என்று வருத்தத்தைத் தெரிவித்துக்கொண்டார். இதுபோன்ற தகாத வழி செல்வோரை, தண்டிக்க வேண்டியது ஆட்சியாளர் கடமையாகும் என்று வலியுறுத்திப் பேசினர்.

கிராமப் பஞ்சாயத்து பற்றிய தீர்மானத்தையும், நூல் விலையைக் குறைத்து நெசவாளரை அவதியிலிருந்து காக்க

வேண்டியது பற்றிய தீர்மானத்தையும் தலைவர் ஓ வி. அளகேசன் அவர்களே பிரேரித்தார். தீர்மானங்கள் ஏக மனதாக நிறைவேறின.

## தி. மு. க.வின் தீய போக்கு

இன்று செய்தித்தாள்களை எடுத்தால் தினமும் "தி.மு.க' வினரின் காலித்தனம் காஞ்சிக்கருகாமையில்'' "சென்னைக் கூட்டத்தில் சோடா பாட்டில் வீச்சு''என்று இப்படி எல்லாம் செய்திகள் வந்துகொண்டே இருக்கின்றன. நாட்டின் ஒழுங்கு முறையிலும், அமைதியிலும் நம்பிக்கையுள்ள யாரும் உள்ளம் வருந்தாமல் இருக்க முடியாது.

இதற்கு அடிப்படைக் காரணம் என்ன? திராவிட முன்னேற்றக் கழகத்தைப்போன்ற பிற்போக்குச் சக்திகள் ஏன் நன்முறையில் நம்பிக்கை இழந்து வன்முறையில் இறங்க வேண்டும்? இந்தக் கேள்விகள் பலருடைய உள்ளத்திலும் எழலாம். ஜனநாயக நாடுகளில் இயங்கிவரும் அரசியல் கட்சிகள் நல்ல கொள்கையின் அடிப்படையில் இயங்கினுல் இதுபோன்ற இழிவான செயல்களில் ஈடுபடுவதில்லை. ஆனுல் தி. மு. க.வைப் போன்று தனக்கென்று வரையறுக்கப்பட்ட கொள்கையோ, திட்டமோ இல்லாது, ஏதோ காற்றடித்த பக்கம் கட்சி கட்டிச் செல்லலாம் என்ற உதிரி மனப்பான்மை யில் இயங்குபவை எல்லாம் இதுபோன்ற இழிசெயல் புரிவது வியப்புக்குரியதல்ல.

திராவிட முன்னேற்றக் கழகத்தினர் இப்படி திடீரென்று காலித்தனங்களில் இறங்குவானேன்? பட்டினம் மட்டுமின்றி பட்டி தொட்டிகளிலிருந்தும் இதுபோன்ற செய்திகள் வருகின்றனவே என்று கேட்கலாம். அதற்குக்

காரணம் இல்லாமலில்லை. இவ்வளவு நாட்கள் காங்கிரஸ் ஊழியர்கள் தங்களின் கட்சி நாட்டின் வளர்ச்சிக்குத் திட்டமிட்டுச் செய்து வந்துள்ளவற்றை நாட்டு மக்களிடையே நல்லமுறையிலே அவ்வளவாக எடுத்துச்சொல்லவில்லை; திராவிட முன்னேற்றக் கழகம் போன்ற பொய்யையும் புனை சுருட்டுதலையுமே தொழிலாகக்கொண்ட தீய சக்திகள் பேசி வந்தனர்; அவர்கள் "தனிக்காட்டு ராஜாக்கள்"போல உலவி வந்தனர்.

ஆனால் இன்றோ நாட்டு மக்களிடையே புதியதொரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளது; காரணம் காங்கிரஸ் அன்பர்கள் ஆங்காங்கு கூட்டங்கள் போட்டு அமைதியான முறையிலும், மக்கள் வியந்து பாராட்டுகின்ற வகையிலும், காங்கிரஸ் செய்துவரும் நன்மைகளை, மக்களுக்குச் சிறந்த முறையில் எடுத்துச்சொல்லி வருகின்றனர்; 'மேடை' என்பது தங்களின் ஏகபோகச் சொத்து என்று இறுமாந்திருந்த முன்னேற்றக் கழகத்தினருக்கு ஒரே திகில்.

அதிலும் குறிப்பாக காங்கிரஸ் கூட்டமென்றால் இன்றெல்லாம் மக்களுக்கு ஒரு "திருவிழா". ஆயிரக்கணக்கிலே அங்கே கூடி அகமகிழ்கின்றனர்; எதிர்க்கட்சிகளின் "பித்தலாட்டப் பிரசாரத் திரை" கிழிக்கப்படுகிறது. உண்மையை மக்கள் உணர்ந்து கொள்கிறார்களே என்று தெரிந்துகொண்டவுடன் தீய சக்திகளுக்குப் பொறுக்க முடியவில்லை. மக்கள் காங்கிரஸ் கூட்டங்களுக்குச் சென்று உண்மையைப் புரிந்துகொண்டவுடனே காங்கிரசின் செல்வாக்கு இன்று இமயம் போல் மக்களிடையே உயர்ந்து வருகிறது. மக்களிடையே ஏற்பட்டுள்ள விழிப்புணர்ச்சி ஒருபுறமிருக்க, அதன் தோழர்களில் பலரும் இன்று அந்த முகாமை உதறித் தள்ளிவிட்டு காங்கிரஸிலே வந்து சேருகின்றனர்.

முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த முக்கிய தலைவர்களிலே ஒருவர் அண்மையிலே புரசைவாக்கத்திலே பேசிய பொழுது "கலகம் விளைவிப்பதற்கும், கூட்டத்தினைக் கலைப்ப

தற்கும் நான் வகுப்பே நடத்துவேன்" என்று பொறுப்பற்ற முறையிலே பேசியிருப்பதே இதற்குச் சான்று. அதே இடத்தில்தான் காங்கிரஸ் கொடி "காலிகளாலும், கூலிகளாலும்," அன்று அறுக்கப்பட்டு எரிக்கப்பட்டதாக பத்திரிகைகளிலே வந்துள்ள வருந்தத்தக்க செய்தியும் கூர்ந்து நோக்கத்தக்கது.

ஆளுங்கட்சியினர் அல்லது எதிர்க்கட்சியினராய் இருப்பினும் இத்தகைய இழிசெயலைக் கண்டிக்காமல் இருக்க முடியாது. மக்களாட்சியின் சீரான வளர்ச்சிக்கே இது சீரழிவைக் கொடுத்துவிடும். குழந்தைகள் "மணல் வீடு" கட்டி மணலிலே விளையாடி மகிழ்வதும் பின்னர் கலைப்பதும் போல, நாளுக்கொரு கொள்கையும் வேளைக்கொரு வேலைத் திட்டமுமாகப் பொறுப்பற்ற முறையிலே அரசியல் இயங்கி வருவதன் விளைவுதான் இன்றைய இழிநிலைக்குக் காரணம். ஆடிக் காற்றில் தங்களின் அறியாமையும் பித்தலாட்டமும் பறப்பதைக் காணச் சகியாமல் முன்னேற்றக் கழகத்தினர் இன்று பலாத்காரத்தில் ஆங்காங்கு இறங்க ஆரம்பித்துள்ளனர்.

இதுபோன்ற பலாத்காரப் போக்கு முன்னேற்றக் கழகத்தின் அழிவுக்குத்தான் வழிகோலுமே ஒழிய, ஒருக்காலும் ஆக்கத்திற்கு வழி வகுக்காது.

மக்களாட்சியின் சிறப்பைப் பற்றி "வாய் கிழியப் பேசும் கழகத்தினர்" இனியாவது சிந்தித்துப் பார்த்து, இதுபோன்ற இழிசெயல்களை விடுத்து, நன்னெறியைப் பின்பற்றி நாட்டில் சீரான முறையில் மக்களாட்சி வளர ஒத்துழைப்பார்களென்று நம்புகிறோம்.

காங்கிரஸ் ஊழியர்களும், முன்னேற்றக் கழகத்தினர் கீழ்த்தரமான செயல்களில் ஈடுபட்டாலும், சற்றுப்பொறுமையோடு இருந்து, மக்களே முன்னேற்றக் கழகத்தினரின் மூடப் போக்கினை வெறுக்கின்ற அளவில் அமைதியான அன்பான வழிகளில் நடந்துகொண்டு பிற்போக்குச் சக்திகளும் "அன்பு

வழியின் அருமை பெருமையினை'' உணர்கின்ற அளவுக்கு நல்லதொரு சூழ்நிலையை உருவாக்கப் பாடுபடுவார்களென்று நம்புகிறோம்.

## சந்தர்ப்பவாதக் கட்சிகளை ஒதுக்குங்கள்!

சுதந்திரத்திற்குப் பிறகு நல்லவர், பொல்லாதவர் எல்லோருக்குமே நாம் ஜனநாயக முறைப்படி ஓட்டுரிமை கொடுத்து வைத்திருக்கிறோம். திருப்பூரிலே நம் கொடி காத்த குமரனுடைய குடும்பத்தாருக்கு ஓட்டுரிமை கொடுத்துள்ள அதே நேரத்தில் நல்லாட்சிக்கு ஊறுவிளைவிக்கும் அண்ணாதுரைக்கும் அவரது குடும்பத்தாருக்கும் ஓட்டுரிமை கொடுத்துத்தான் இருக்கிறோம்.

தி. மு. க.வினருக்கு ஏதாவது அரசியல் பண்பு இருக்கிறதா? மேடையில் ஏறினால் தனிப்பட்ட முறையில் தலைவர் காமராஜரையும், மற்றவர்களையும் பற்றிக் கண்டபடி பேசுகிறார்கள். வெட்கமாயில்லை!......இப்படிப் பேசுபவர்கள் அரசியல்வாதிகளாக எப்படி இருக்க முடியும்?

நாம் இன்று பிரம்மாண்டமான கப்பல்களையும், ரயில் என்ஜின்களையும், ரயில் பெட்டிகளையும், மோட்டார் சைகிள் போன்ற வாகன வகைகளையும், உற்பத்தி செய்கின்ற அளவுக்கு முன்னேறியுள்ளோம். இவைகளெல்லாம் நமது பதின் மூன்றாண்டுக்கால மகத்தான சாதனைகள். இவற்றை எண்ணாமல் தட்டினால் தங்கம், கொட்டினால் கோமேதகம், வெட்டினால் வெள்ளி, மூழ்கினால் முத்து, என்று அடுக்கிப் பேசினால் போதுமா? அப்படியாவது தட்டி, கொட்டி, வெட்டி, மூழ்கிக் காட்டு! பேசுகிறபோதெல்லாம் சேலத்தில் இரும்பு கிடைக்கிறதே என்கிறார்கள்—ஐயையோ தெற்கு தேய்கிறதே என்கிறார்கள்!

இத்தாலிய ஜெர்மானிய நிபுணர்களைக்கொண்டு தொழிற்சாலைக்கேற்ற இடங்களை ஆராய்ச்சி செய்து, எங்கு இரும்பு, நிலக்கரி, போன்ற மூலக் கச்சாப் பொருள்கள் நிறைய கிடைக்கின்றனவோ—உயர்ந்த தரத்தில் அகப்படுகின்றனவோ அங்கு தொழிற்சாலைகளைத் துவக்குகிறோம். இதிலே குற்றம் என்ன இருக்கிறது?

வயதான காலத்தில் அரசியலில் தோல்வி கண்ட நிலையில் ராஜாஜி சுதந்திரக்கட்சியைத் துவக்கியிருக்கிறார். பணக்காரர்களுக்கு வரி விதிக்கப்படுகிறது என்று கதறுகிறார். ஐம்பது சொக்காய்கள் உள்ள ஒருவனிடமிருந்து, சொக்காயே இல்லாத ஒருவனுக்கு, ஒரு சொக்காய் கிடைக்கும்படி செய்வதே நல்லது என்று காமராஜர் கருதுகிறார். இதிலே தவறு என்ன இருக்கிறது?

சுதந்திரக்கட்சி, ஒரு வாழா வெட்டிக் கட்சி! ஒப்பாரிக் கட்சி!

காமராஜர் ஆட்சி ஒரு கல்யாண வீடு மாதிரி! கல்யாண வீட்டுமுன், தாலி கட்டும் சமயம் சில விதவைகள் கூடி, நாங்கள் தாலி அறுபட்டு இருக்கிறோம்; நீ எப்படி தாலி கட்டலாம்? என்று கேட்ட கதையாகத்தான் இருக்கிறது சுதந்திரக் கட்சியின் ஒப்பாரி!!

இந்திய எல்லையில் புகுந்து ஆயிரக்கணக்கான சதுர மைல் தூரத்தை ஆக்கிரமித்து இருக்கிறான் சீனாக்காரன்.

இங்கு இருக்கின்ற கம்யூனிஸ்டுகள் கூறுகிறார்கள், வண்ணாத்திப் பூச்சி பிடிக்க வந்திருப்பான் என்று.

இப்படிப்பட்ட கங்காணிகள், நாட்டைக்காட்டிக்கொடுக்கும் கொடுமதியாளர்கள்!

எல்லா எதிர்கட்சிகளின் யோக்கியதையையும் கண்டோம்; பொதுமக்கள் எந்தக் கட்சியை ஆதரிப்பது?

பொது மக்களின் தேவை அறிந்து நல்ல பல திட்டங்களை வகுத்து, நாட்டில் பசி, பிணி, வேலையில்லாத் திண்டாட்டம், அறியாமை முதலானவைகளை விரட்டி, சுபிட்சம் காண வழிகோலும் காமராஜர் ஆட்சியை—காங்கிரஸ் கட்சியைப் பலப்படுத்துவோம். அதுதான் நம் எல்லோரின் கடமையுமாகும்!

## புதுமைத் தமிழகத்தின் சிற்பியே! நீடூழி வாழி !

தமிழகத்தின் வரலாற்றுக் காவியத்தில் தனி இடம் பெற்ற நம் தலைவர் முதலமைச்சர் காமராஜ் அவர்களின் ஐம்பத்தாருவது பிறந்த தினம் ஜூலை 15 என்று அறிய அக மகிழ்ச்சியுறுகிறோம். "முதலமைச்சர் காமராஜ்" என்றால் மக்களின் மனக்கண்முன் வந்து நிற்பது—அவரது எளிய தோற்றம்! ஏற்றமிகு பார்வை! தாயின் நெஞ்சம்போல, ஏழையைக் கண்டால் அன்பால் உருகி நிற்கும் உயர்ந்த சிந்தை. ஆம்! "செயல் திறமை"யின் மறுபெயர்தான் காமராஜ் என்று சொன்னால் அது மிகையல்ல.

குவலயத்தில் பல மாவீரர்கள் தோன்றியதுண்டு. அமெரிக்க மக்களை "அடிமை முறை"யினின்றும் விடுவிக்கத் தோன்றிய "விடிவெள்ளி" ஆபிரகாம் லிங்கன். இரஷ்ய நாட்டினை இன்ப புரியாக்கிய இலட்சிய வீரன் லெனின். சீனத்துச் சிங்கம் சன்யாட்சன். இவ்வாறு வரலாற்றுக் காவியம் இசைபாடும் இலட்சியத் தலைவர்கள் பலருண்டு! ஆனால் கொடுமையைக் கண்டு கொதித்தெழும் கொள்கை வீரர்கள் வரிசையிலேயே அன்புவழி மூலம்—அகிம்சைப் புரட்சி மூலம் விடுதலை தேடித்தந்த ஒரே தலைவன் அண்ணல் காந்தியடிகள் என்று பாருலகம் பாராட்டுகின்றது. அத்தகைய உலகத் தலைவன் நாட்டுக்களித்த நற்செல்வங்களுள் ஒருவர்தான் நம் தலைவர் காமராஜ் அவர்கள்.

தலைவர் காமராஜ் அவர்களைப்பற்றிப் பேரறிஞர் பலர் பல்வேறு கோணத்திலே பாராட்டுகின்றனர். ''அதிசய மனிதர்'' என்று யாரும் பேசக் காண்கின்றோம். ஆனால் சாதாரண பாமர மக்களும்—வறுமையிலே உழலும் ஏழை மக்களும் ஏழ்மையிலிருந்தும், இன்னலில் இருந்தும் தங்களை விடுவிக்கத் தோன்றியுள்ள வித்தகராகத்தான் காமராஜ் அவர்களைக் காண்கின்றனர். அதற்கான காரணமும் இல்லாமலில்லை. உழைப்பால் உயர்ந்த உத்தமத் தலைவர் காமராஜ் அவர்களின் பொதுவாழ்வின் வெற்றிக்கான காரணம் அவர்களது பொது அறிவும், நுண்ணிய அறிவாற்றலும்தான். அவர்களை ''அனுபவ மேதை'' என்றே சுருக்கமாகச் சொல்லி விடலாம். ஒரு மணி நேரத்தில் சொல்ல வேண்டியவற்றை அப்படியே ஒரு நிமிடத்தில் சுருங்கச் சொல்லும் அவர்களது அனுபவ அறிவாற்றலை மாற்றுக் கட்சியினரும் வியந்து பாராட்டுவதைக் கேட்கிறோம்.

இன்று காமராஜ் அவர்கள் வருகிறார் என்றால் பட்டி தொட்டிகளில் எல்லாம் ஒரே மகிழ்ச்சிப் பெருக்கு !...ஊரே திருவிழாக் கோலம் பூண்டு விடுகிறது. இத்தகைய காட்சிகளை நேரில் காணக் கூடியவர்கள் எல்லாம் ஒரே வரியில் சொல்லி விடுகிறார்கள். ஆம், காமராஜ் ஏழை வணங்கும் தெய்வமாக மாறிவிட்டார். இந்தப் புதுமை புரட்சிக்கான காரணம் என்ன ? அவரது இதயம் இன்று ஏழை மக்களின் இதயங்களோடு இணைந்து விட்டது என்று ரத்தினச் சுருக்கமாகச் சொல்லிவிடலாம்.

மக்களின் நாடித் துடிப்பை (Pulse of the People) உணர்ந்து அதற்கேற்ப ஆட்சி இயலை நடத்திச் செல்கின்ற காரணத்தால்தான் இன்று இந்தியாவிலேயே சிறந்த முறையில் நிர்வகிக்கப்படும் மாநிலம் என்ற பெருமையினைப் பெற்றிருக்கிறது நமது சென்னை மாநிலம்.

நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வந்ததன் மூலம் முதலமைச்சர் அவர்கள் இன்று உழவர்களின் நெஞ்சத்-

திலே நீங்கா இடம் பெற்றுவிட்டார். ஓலைக் குடிசையிலே ஊருக்கு ஓரத்திலேயே வாழ்கின்ற ஏழை உழவனது நிலை தான் என்ன ? குந்தியிருக்கும் குடிசை அவனது உழைப்பிலே உருவான வறுமைக்காட்சி. ஆனால் நிலமோ நிலச்சுவான் தாரைச் சாரும். சிறுகோபம் வந்தாலேயே போதும். சீறி விழுவார். குடிசை காற்றிலே பறக்கும். இத்தகை இழி நிலையினின்றும் ஏழையைக் காக்க யாரும் முனைந்தாரில்லை. ஆம். நம் தவத்தலைவர் அன்று தஞ்சை மாவட்டத்தில் சுற்றுப் பயணத்தின்பொழுது "ஏழை விவசாயிக்கு குடியிருக்க மனைக்கட்டுகளைப் பட்டாபோட்டுக் கொடுத்துவிட ஏற்பாடு செய்யப் போகிறேன்" என்று சொன்னதுதான் தாமதம். அப்பப்பா ! ஒரே ஆரவாரம். குழிவிழுந்த ஏழை மக்களின் கண்களிலே அன்று கண்ட ஒளியினையும், மலர்ச்சியையும், மகிழ்ச்சியையும் வார்த்தைகளால் வடித்தெடுக்க முடியாது. அதனால்தான் ஏழையின் இதயத்தைத் தொடும் அற்புதச் சிற்பி நம் முதலமைச்சர் என்று பூரிப்படைகின்றனர் நல்ல மனம் படைத்த நாட்டு மக்கள்.

ஆனால் மக்கள் நலனைக் காட்டிலும், கட்சி நலனே பெரியது என்று எண்ணுகின்ற குள்ளநரிப் புத்தி படைத்தாரோ குமுறுகின்றனர் பொறாமைத் தீயால். இதுதான் இன்றைய நாட்டு நிலை.

பள்ளிக்குச் செல்வதற்குப் பாலகன் தயார். ஆனால் அவனுக்கு நல்லுணவு கட்டிக் கொடுத்து கல்வி நிலையத்துக்கு அனுப்பக் காசில்லை ஏழையின் கையிலே! இதை உணர்ந்த நம் தலைவரது ஆட்சியிலே பள்ளி செல்லும் பாலகர்களுக்கு இன்று இலவசப் பகல் உணவுத் திட்டம்! போற்றாமல் எப்படி இருக்க முடியும் நேர்மை நெஞ்சம் படைத்தோர்! இன்று "காமராஜ்" என்ற சொல் "அதிசயம் விளைவிக்கும் அற்புதமாக" மாறி வருகிறது. பல்கலைக் கழகங்களிலே படிக்கும் வருங்காலச் செல்வங்களின் "இதய கீதமாக" மாறி விட்டார் நம் தலைவர்.

காடெல்லாம் கழனியாக மாறும் காட்சி, மேடெல்லாம் மேழிச் செல்வம் பூக்கும் மாட்சி! கல்லுடைத்த காடுகளில் இன்று இயந்திரப் புரட்சி! எங்கும் தொழிற்சாலைகள் புற்றீசல் போல் தோன்றுகின்ற புதுமைப் புரட்சி!...ஏங்கி நின்ற ஏழை இதயம் இன்புறுந் தோற்றம்! துவண்ட உள்ளமும் துள்ளிக் குதித்தெழும் நாட்டுப்பற்று மிக்க நல்ல உள்ளமாக மாறும் நன்நிலை! ஊழியர் வர்க்கமோ இன்று ஊழியர் தலைவனைப் பார்த்து நெஞ்சு நிமிர்ந்து செம்மாந்து நிற்கும் சீரிய காட்சி! மாற்றுக் கட்சிகளோ இந்த "இமயத்தை எதிர்ப்பதும் இயலுமோ?" என்று மனம் குலைந்து மருண்டு நிற்கும் நிலை. இதைத்தான் காமராஜ் அவர்களின் பிறந்த தின விழாவிலே மக்கள் காணுகின்றனர்.

இத்தகைய ஆற்றலும் அறிவும் அன்பும் ஒருங்கே நிறைந்து நிற்கும் நம் மாநில முதலமைச்சர் அவர்கள் பல்லாண்டு நீடு வாழ்ந்து பல்வளமும் பொழியும் பண்புத் திருநாடாக நம் நாட்டை ஆக்கும் நற்பணியில் வெற்றிகாண வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறோம். "புதுமைச் சென்னையின் சிற்பியே நீங்கள் பூவுலகம் போற்ற வாழி" என்ற எங்களது இதயங்கனிந்த நல்வாழ்த்துக்களையும் நல்குகின்றோம்.

## எதிர்க்கட்சிகளின் திருத்தொண்டு!

ஜனநாயக வழிகளில் மக்களை அணுகி, அவர்களது ஆதரவைப் பெற இயலாத பிற்போக்குச் சக்தி எல்லாம் இப் பொழுது பலாத்காரத்திலும், மக்கள் விரோதச் செயல் களிலும் ஈடுபட ஆரம்பித்துள்ளன. குறிப்பாக திராவிட முன்னேற்றக் கழகத்தைப் போன்ற பிற்போக்குச் சக்திகள்

தங்கள் கட்சியும் உயிரோடு இருக்கிறது என்பதை அவ்வப் போது மக்களுக்கு நினைவுபடுத்துவதற்காக அடிக்கடி போராட்டம் என்ற புஸ்வாணத்தை விடுவது வழக்கமாகி விட்டது.

இப்பொழுது ஏதோ இந்திப் போராட்டம் என்ற பெயரால் தி. மு. க. வினர் புதியதொரு கிளர்ச்சியை துவக்கவிருப்பதாக அறிவித்துள்ளனர். இந்த வழக்கமான "ஸ்டண்டை"ப் பார்த்துச் சலித்துப் போன பொது மக்கள் இவர்களை எள்ளி நகையாட ஆரம்பித்து விட்டனர். "போராட்ட"த் தோல்வியையே பிறப்புரிமையாக்கிக் கொண்டுள்ள முன்னேற்றக் கழகத்தினரின் பழைய போராட் டங்கள் என்னவாயிற்று, என்று மக்கள் கேட்க ஆரம்பித் தனர்.

கல்லக்குடி போராட்டம் என்று முன்பு ஒரு போராட் டத்தைத் துவக்கினார்கள். "செங்குருதி கொட்டுவோம் வாரீர்!" "தலையைக் கொடுப்போம் தண்டவாளத்திலே! தம்பிமார்களே!" என்று கூக்குரல் எழுப்பினர். ரயிலை நிறுத்தினர்.

தண்டவாளத்தில் படுத்தனர். அப்பாவி பாமர மக்களுக்கு அல்லலை ஏற்படுத்தினர். துவக்கிய தினத்திலேயே தோல்வி கண்டது "கல்லக்குடி ஸ்டண்ட்." துன்மதியாளர் துவக்கிய தூத்துக்குடி போராட்டத்துக்கும் இதே கதிதான். கல்லக்குடியிலே கரிபூசப்பட்டு, தூத்துக்குடியிலே தோல்வி கண்ட முன்னேற்றக் கழகத்தினர் இன்று இந்திப் போராட் டம் ஆரம்பிக்கப் போகிறார்களாம். ஏதோ தமிழுக்கு ஆபத்து வந்துவிட்டதாக, இந்த "தமிழ்த் துரோகிகள்" கூச்சலிடு வதைத்தான் நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. காரணம் முத்தமிழ் வளர்ச்சிக்கு இவர்கள்தான் "முட்டுக் கட்டைகளாக" இருந்து வந்துள்ளனர். இவர்களுடைய மூதாதையர்களாகிய ஜஸ்டிஸ் கட்சியினர்தான் ஆங்கில மோகத்தில் மூழ்கிக் கிடந்தனர். அருந்தமிழில் பேசுவது

அவமானம்!'' "ஆங்கிலத்தில் பேசுவது தன்மானம்!'' என்று அடிமைப் புத்தியில் பிதற்றிக் கொண்டிருந்தனர். தாய் மொழி மறுமலர்ச்சித் தந்தையாக அண்ணல் காந்தியடிகள் தோன்றினர். காங்கிரஸ்காரர்கள் அவரவரது தாய்மொழி யிலேயே பேச வேண்டும் என்று கட்டளையிட்டார். இதன் விளைவாக நாடு முழுவதும் தாய்மொழி மறுமலர்ச்சி இயக்கம் தோன்றியது.

நாட்டின் நாலு பக்கங்களிலும் தாய்மொழி "இலக்கியச் சோலைகள்'' தழைக்க ஆரம்பித்தன. தமிழ்ச் சோலையில் பூத்துக்குலுங்கிய புதுமலர்கள்தான் புரட்சிக் கவிஞன் பாரதி போன்ற புதுமை எழுத்தாளர்கள்.

வங்கம் தந்த தங்கக் கவிஞன் தாகூர் போன்ற உலக எழுத்தாளர்கள், மறுமலர்ச்சிச் சோலையில் பூத்த "மகிழம் பூ'' என்றே சொல்லலாம். ஆனல் அன்று நற்றமிழை நகைத்த ஜஸ்டிஸ் கட்சிப் பரம்பரையாம் தி. மு. க. வினர் இன்று மொழி காக்கும் வீரர்களாகும் விந்தையே விந்தை! தங்களின் துரோக வரலாற்றை மூடி மறைப்பதற்கான "முகமூடிதான்'' இன்றைய முன்னேற்றக் கழகத்தினரின் மொழிப்பற்று எஎ்ற நடிப்பு. இதை நாட்டு மக்கள் நன்கு உணர்வர்.

நாடு விடுதலைக்குப் பின் மொர்ழிவாரி மாநிலம் அமைக்கப் பட வேண்டும் என்ற காந்தியடிகளின் கனவின் அடிப் படையே, பாரதத்தின் பல்வேறு மொழிகளும், கலைகளும் ஆங் காங்கு பல்கிப் பெருகிச் செழிக்க வேண்டும் என்பதுதான். அண்ணல் கண்ட கனவு இன்று நனவாகி வருகிறது. இன்று மேற்கோளாக தமிழ் நாட்டையே எடுத்துக் கொள்வோம். ஆந்திரமும் கேரளமும் நம்மிடமிருந்து பிரிந்ததின் பின்னர், இன்றைய சென்னை ஆட்சியாளர் செந்தமிழை ஆட்சிமொழி ஆக்கிவிட்டனர்.

ஆங்கிலத்துக்குத்தான் ஆளும் தகுதி உண்டு என்று கொக்கரித்த ஜஸ்டிஸ் கட்சியினரின் கொள்கை இன்று குழி தோண்டிப் புதைக்கப்பட்டுவிட்டது. இன்று நாடு முழுவதும் நற்றமிழ் முழக்கம்! பள்ளிக்கூடத்திலும், பல்கலைக் கழகத்திலும், ஆட்சியாளர்களின் அலுவலகங்களிலும், நாடாளும் நன்மன்றத்திலும், இன்று கோலோச்சும் அரசியாகக் கன்னித் தமிழ்த்தாய் கொலு வீற்றிருக்கும் கோலாகலக் காட்சி! இத்தகைய புதுமையைத் தோற்றுவித்த ஆட்சியாளர் மீதுதான் புல்லர்கள் போர் தொடுக்கப் போகின்றனராம்! புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக்கொண்ட கதையைத்தான் இது நினைவுபடுத்துகிறது.

“மொழி வளர்ச்சி” என்ற முன்னேற்றப் பாதையை உருவாக்கும்பொழுது, முட்டுக்கட்டைகளாக அன்னிய மொழிக்கும், ஆங்கில ஆட்சிக்கும் “முகாரி” ராகம் பாடுபவர்களாகத்தான் இன்றைய முன்னேற்றக் கழகத்தின் மூதாதையர் (ஜஸ்டிஸ் கட்சியினர்) இருந்தனர் என்பதை நாடே அறியும்.

காங்கிரஸ் என்றுமே நாட்டின் பல்வேறு மொழிகளும் கலைகளும் பண்போடு வளரவேண்டும் என்று பாடுபட்டு வருகிறது. அவரவர்க்கும் தாய்மொழிமீது விருப்பு தேவை: ஆனல், அந்த விருப்பு மாற்று மொழியின்மீது வெறுப்பாக மாறக்கூடாது. இதுதான் காங்கிரஸ் காட்டும் பண்பாட்டுப் பாதை! அந்த அடிப்படையில்தான் இந்தியநாட்டு மொழிக் கொள்கை வகுக்கப்பட்டுள்ளது. அந்தந்த மாநிலத்திலும் ஆங்காங்குள்ள தாய்மொழியே அரசு மொழியாக இருக்கும். மாநில மொழியின் வளர்ச்சியில் மற்ற மொழிகள் தலையிட முடியாது.

இந்த உயர்ந்த கொள்கையின் காரணமாகத்தான், நாட்டிலுள்ள பதினன்கு மொழிகளும் தேசிய மொழிகள் (நேஷனல் லாங்வேஜஸ்) என்று இந்திய அரசியல் சட்டம் ஏற்றுக் கொண்டது. உதாரணமாகத் தமிழ் இந்திய தேசிய

மொழிதான். இந்தியும் தேசிய மொழிதான். வங்காள மொழியும் தேசிய மொழிதான். இது போன்றே பிற மொழிகளும் தேசிய மொழிகளாகும்.

ஆனால் அனைத்திந்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் ஓர் இணைப்பு மொழி தேவை. அது இன்று ஆங்கிலமாக உள்ளது. மாநில அரசையும், மத்திய அரசையும் இணைக்கும் அந்த இணைப்பு மொழியாக ஆங்கிலமே தொடர்வதா? அல்லது இந்திய மொழிகளில் ஏதாவதொன்று அந்த இணைப்பு மொழியாக இருப்பதா? என்ற கேள்வி எழுந்தது.

நாட்டில் உள்ள பதினைன்கு மொழிகளும் தேசிய மொழிகளாக இருந்தாலும், ஏதாவது ஒரு மொழிதான் அந்த "இணைப்பு மொழி" என்ற இடத்தைப் பெற முடியும். அவ்வாறு பார்க்கும்பொழுது, பதினைன்கு மொழிகளுள் எந்த மொழி பெரும்பான்மையான மக்களால் நாட்டில் பேசப்படுகின்றதோ, அந்த மொழிதான் "இணைப்பு மொழி"யாக இருக்க முடியும். பகுத்தறிவுப்படி பார்த்தால் அதுதான் நீதியான வழியுமாகும்.

உதாரணமாக மூன்று கோடிக்கு மேற்பட்ட மக்கள் பேசும் வங்க மொழி அந்த "பெரும்பான்மை" என்ற இடத்தைப் பெற முடியாது. மூன்றரை கோடி மக்கள் பேசும் தெலுங்கும் அந்த இடத்தை அடைய இயலாது. அதே போலத்தான் மூன்று கோடிக்கு மேற்பட்ட மக்கள் பேசும் முத்தமிழாம் நம் மொழியும் அந்த இடத்தை அடைய முடியாது. ஆகவே பதினைன்கரை கோடிக்கு மேற்பட்ட மக்களால் பேசப்படும் இந்தி மொழிக்கு இணைப்பு மொழி என்ற இடம் கொடுக்கப்பட்டது. அதைத்தான் மத்திய அரசின் ஆட்சி மொழி (அபீஷியல் லாங்வேஜ்) என்று பெயரிடுகிறோம்.

ஆயினும் தமிழ்நாடு போன்று இந்தி அல்லாத மற்ற மொழி பேசக் கூடியவர்களின் நன்மைக்காக, நாம் புரிந்து கொள்ளும் ஆங்கில மொழியும் இந்தியோடு ஆட்சிமொழி

யாக இருக்கும் என்று ஏற்றுக் கொள்ளப்பட்டது. இந்தி மொழி புரியாத மாநிலங்கள் அம்மொழியைப் புரிந்து கொள்ளும் வரையிலும், ஆங்கிலமே தொடர்ந்து இருந்து வரப் போகிறது. இணைப்பு மொழியாகிய இந்தி மொழியை நாமெல்லாம் புரிந்து கொள்ளும் அளவுக்கு வரும் பொழுது இந்தி மட்டும் இணைப்பு மொழியாக இயங்கலாம். அப் பொழுதும் ஆங்கிலத்துக்குள்ள இடத்தை பிற துறைகளில் யாரும் அலட்சியப்படுத்த முடியாது. இதுதான் நாடு வகுத் துள்ள புதுக்கொள்கை. இதில் தவறு என்ன இருக்கிறது? நம் மாநிலத்தில் உள்ள அரசியல் கட்சித் தலைவர்களும்—திரு. அண்ணாத்துரையுள்பட இந்தக் கொள்கையை ஏற்றுக் கொண்டனர் சட்டமன்ற கட்சித் தலைவர்களின் கூட்டத் திலே!

ஆனால் அன்று ஏற்றுக்கொண்ட முன்னேற்றக் கழகம் இன்று எதிர்க்கிறதாம்! ஏதோ இந்தி ஏகாதிபத்தியமாம்! பாவம்! உலகம் புரியாதவர்கள். அப்படியே புரிந்தே இருந் தாலும் மக்களை ஏமாற்ற நினைக்கும் மாபாவிகள்!

இந்தியின் நிலைதான் என்ன? நாட்டில் உள்ள பல்வேறு மொழிகளும் வண்ண மலரினைப் போன்றவை. இப்பூக்களை இணைத்து கண்ணைக் கவரும் ஒரு மாலையை உருவாக்க வேண் டும். இதற்கொரு நார் தேவை. மலர்களை இணைக்கும் நார் போலத்தான் இந்தி இணைப்பு மொழியாக மாறுகிறது. மணத்திலும் அழகிலும் பூவுக்கும் நாருக்கும் போட்டி! அதிலே பூவினை நார் வென்றுவிடும் என்று ஒருவர் சொன்னால் அவரை என்னவென்று அழைப்பது? “பேதை” என்றுதான் அழைக்க வேண்டும். அதே போன்றுதான் முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்தோர். கன்னித் தமிழாம் வண்ண மலரை இந்தி வென்றுவிடும் என்றும், அதனாலேயே தமிழைக் காக்கத் தாங்கள் போராட்டம் ஆரம்பிப்பதாகவும் பிதற்றித் திரிகின் றார்கள். நீராலும் நெருப்பாலும் அழியாத—அழிக்கப்பட முடியாத நற்றமிழை, நாரா வெல்ல முடியும்? இது இயற்

கைக்கு மாறுனது. மலரோடு கூடிய நார், வேண்டுமானுல் ஒரு வேளை மணம் பெறலாம். ஆனுல் நாரே மலராகிவிட முடியுமா ?...முடியாது. அதேபோலத்தான் இந்தி இணைப்பு மொழியாகத்தான் இருக்க முடியுமே தவிர, பிரதேச மொழிகளின் நியாயமான வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்கமுடியாது.

இன்னொரு உதாரணம் கூற வேண்டுமானுல் நாட்டில் உள்ள பல்வேறு மொழிகளும், கலைகளும், சிற்ருறுகள் என்ருல் இந்தச் சிற்ருறுகள் எல்லாம் ஒன்று கூடும்பொழுது ஒரு பெரிய ஆருக மாறுகின்றன. அதுதான் ஒன்றுபட்ட இந்திய சமூதாயம் என்ற பேராறு! இந்தப் பெரிய ஆற்றின் இரு கரைகளையும் இணைக்க ஒரு பாலம் தேவை! அந்தப் பாலம் போன்றதுதான் இந்தி! ஒருவன் கரைமீது நின்றுகொண்டு, "ஐயகோ! பாலம் ஆற்றினையே அடித்துச் செல்லுகின்றதே!" என்று கூக்குரலிட்டால் அவனை என்னவென்பது? உன்மத்தன் என்பதா? அல்லது உளறுவாயன் என்பதா? அதுபோன்றுதான் முன்னேற்றக் கழகத்தினர், பாலம் போன்று வெறும் இணைப்பு மொழியாக இருக்கும் இந்தி, நாட்டிலிலுள்ள பல்வேறு மொழிகளும் கலந்து பல்கிப் பெருகியோடும் பேராற்றினை அடித்துச் சென்றுவிடும் என்று அங்கலாய்க்கின்றனர். எங்காவது ஆறுவேண்டுமானுல் பாலத்தினை அடித்துச்சென்றுவிடலாம். பாலம் ஆற்றினை அடித்துச் செல்ல முடியுமோ ?

ஆகவே முன்னேற்றக் கழகத்தினரின் கூச்சல் அர்த்தமற்றது. ஆதாரமற்றது. அவர்களுடைய இயக்கத்துக்குள்ளேயே இருக்கும் பூசல்களையும், சண்டைகளையும் பொது மக்களின் கவனத்திலிருந்து மறைக்கச் செய்யும் சூழ்ச்சிதான் இந்திப் போராட்டம் என்ற புதிய கூக்குரல். என்னதான் "போராட்டம்" என்ற பெயரால் "திரையிட்டு" மறைக்க முயன்ருலும், அவர்களுடைய கொள்கையையும், கோமாளித்தனத்தினையும் உட்பூசல்களையும் நாட்டு மக்களின் கண்களிலிருந்து மறைக்க முடியாது.

எனவே என்றுமே சிந்தனையிற் சிறப்புற்றிருக்கும் செந் தமிழ் மக்கள் இவர்களின் பொய்யுரைக்குச் செவி கொடுக்க மாட்டார்கள் என்று திடமாக நம்புகின்றோம். இது போன்ற அர்த்தமற்ற போராட்டக் கூச்சல் எழுப்புவோர்க்கு நாட்டு மக்கள் நல்ல பாடம் கற்பிப்பர் என்று நம்புகின்றோம்.

# காங்கிரசும் மக்கள் வெள்ளமும்

'காங்கிரஸ் இயக்கம் கரைந்து வருகிறது; சுதந்திராக் களின் சுருதி வெள்ளத்தில் மக்கள் சக்தி மயங்கி நிற்கிறது. திராவிட முன்னேற்றக் கழகமோ நாளும் வளர்கிறது' என்றெல்லாம் ஓலமிடுபவர்களும், அதற்குப் பக்கவாத்திய மிட பத்திரிகைகளும் மேடைகளும் பல இருந்தும்கூட, காங்கிரஸ் என்னவோ மேலும் மேலும் மக்களிடையே வலிவும் பொலிவும் மிக்க ஸ்தாபனமாகவே விளங்கி வருகின்றது. இந்த உண்மைக்கு உரைபோல இருந்தது—அண்மையில் அகில இந்திய காங்கிரஸ் தலைவர் திரு. சஞ்சீவ ரெட்டி அவர் களின் தமிழகச் சுற்றுப் பயணம். வீரத்திற்கும் விவேகத் திற்கும் விளைநிலம்போல் விளங்கும் ராஜபாளையத்திலிருந்து தான் அவருடைய பயணம் தொடங்கியது.

பனிரெண்டாண்டுகளுக்குப் பின்னர் ராஜபாளையத்தில் நடந்த இராமநாதபுரம் மாவட்ட காங்கிரஸ் அரசியல் மாநாடு மக்கள் ஸ்தாபனமாகிய காங்கிரஸின் மகத்தான சக்தியை நாட்டுக்கு உணர்த்தி விட்டது. கரை புரண் டோடும் உற்சாக வெள்ளம்! காணுமிடமெல்லாம் காட்சி தந்த காங்கிரஸின் சின்னம்! இத்தகைய கோலாகலக் காட்சியை சுதந்திரப் போராட்டத்திற்கு முன்னர்தான் கண்டோம். ஆனால் இடையிலே சிறிது மங்கி இருந்த மக்களின் உற்சாகம் இன்று மறுமலர்ச்சி பெற்றுவிட்டது என்று பூரிப்படைந்தனர் விடுதலைப் போரில் விழுப் புண்ணேந்திய வீரர் பலர்.

காங்கிரசின் புதிய பொலிவுக்கும் வலிவுக்கும் காரணம் என்ன? அரசியல் விடுதலையைத் தேடித் தந்த காங்கிரஸ், பொருளாதார விடுதலையை நாட்டுக்கு அளிக்கும் நற்பணியில் ஈடுபட்டிருக்கும்போது, அன்று சுதந்திரத்தைப் பழித்தவர்களும், இழித்தவர்களும், இன்று பத்தினியாய் வேடம் பூண்டு 'கட்டிய வீட்டுக்கு நொட்டணம் கூறும்' கண்ணியவாளர்களாக மாறினர். மக்கள் நலத்திட்டங்களையும், காங்கிரஸ் இயக்கத்தையும் குறித்து வாய்க்கு வந்தவாறு வசைமாறி பொழிய ஆரம்பித்தனர். மக்களிடையே ஓர் வித மனக் குழப்பம் ஏற்பட்டது; பழித்துப் பேசுவோர் ஒரு சில இடங்களில் பாராட்டப்படுவது போலவும் தோற்றமளித்தது. ஆனால், "பொய்மையும் அசத்தியமும் வெல்வது போன்று தோற்றமளித்தாலும், இறுதியில் உண்மையும் சத்தியமும் தான் நிலையான வெற்றிபெற முடியும்" என்ற வேதங்களின் வாக்கு நனவாகி வருகிறது; இதுதான் இன்றைய காங்கிரஸின் புதிய வலுவுக்கும், பொலிவுக்கும் காரணம்.

இடையில் குழம்பி இருந்த மக்களின் மனோநிலை புதியதொரு தெளிவினையும், ஒளியினையும் பெற்று ஒளிவிட ஆரம்பித்துள்ளது. காங்கிரஸ் ஸ்தாபனம் அரசியல், பொருளியல்—சமுதாய அடிமைகளிலிருந்து நாட்டு மக்களை விடுவிக்க வந்த விடிவெள்ளி. பாலைவனத்திடையே தோன்றும் பசுஞ்சோலை போன்று, "தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டு பாழ்பட்டு நின்றதாமோர் பாரத தேசந்தன்னை வாழ்விக்க வந்த காந்தி அடிகளின் தலைமையில் போராடி, வெற்றி கண்டது. இன்று பொருளாதார விடுதலைக்குப் பாடுபட்டு வருகின்றது.

உலகமே வியக்கின்ற அளவுக்கு நாட்டில் பொருளாதார மறுமலர்ச்சி உருவாகி வருசிறது. திரும்புகின்ற திக்கெல்லாம் பிரம்மாண்டமான அணைக்கட்டுத் திட்டங்கள்! பக்ராவும்—பவானியும் பிலாயும் நெய்வேலியும், இது போன்ற முன்னேற்ற திட்டங்கள், "மக்களின் பொருளாதார எழுச்சிக்

கோயில்களாக'', இன்று எழில் தோற்றமளிக்கின்றன. மனமுடைந்த உழவனுக்கு மருந்தாய் அமைந்துள்ள மணிமுத்தாறுத் திட்டமும், வரண்ட பகுதிகளை வளங் கொழிக்கச் செய்யும் வைகையாற்றுத் திட்டமும் மற்றும் எண்ணற்ற சிறிய—பெரிய தொழிற் கூடங்களும் இன்று மக்களின் மனக் கண்ணைத் திறக்கும் கருவிகளாக மாறி விட்டன; காங்கிரஸ் ஸ்தாபனம் நாட்டில் உருவாக்கி வரும் அமைதியான புரட்சியை (Silent Revolution) நாட்டு மக்கள் உணர ஆரம்பித்து விட்டனர்.

தூற்றுவாரின் துன்மதி வயப்படாது, மக்கள் காங்கிரசின் பணியைப் போற்ற ஆரம்பித்துள்ளனர். இது தான் இன்றைய காங்கிரசின் புதிய கம்பீரமான வளர்ச்சிக்குக் காரணம். 'ஆகவே காங்கிரசை இனி எந்த சக்தியாலும் அசைக்க முடியாது. காங்கிரசுக்கு ஆபத்து வெளியே இருந்து வரமுடியாது. ஆனால் காங்கிரசுக்காரர்களிடையே ஒழுக்க மும், கட்டுப்பாடும், எதையும் தாங்கும் இதயத்தோடு மக்களுக் குச் சேவை செய்யும் சேவா உணர்ச்சியும், குன்றுமே யானால், இயக்கத்துக்குச் சீர்குலைவு ஏற்படும்' என்று சஞ்சீவி ரெட்டி அவர்கள் மதுரை ஊழியர் கூட்டத்தில் பேசிய பேச்சின் கருத்தாழத்தை காங்கிரஸ்காரர்கள் கலங்கரை விளக்காகக் கொள்ளவேண்டும்.

மதுரை நகர் என்றுமே மாவீரத்தையும், தெய்வீகத்தை யும் போற்றும் பண்புள்ள நகரம். அங்கு சஞ்சீவரெட்டி அவர்களுக்கு மக்கள் கொடுத்த மகத்தான வரவேற்பு காங்கிரசிடம் மக்கள் வைத்துள்ள அசையா நம்பிக்கையை யும், அன்பையும் ஆதரவையும் தெளிவாகக் காட்டுகிறது.

வழி நெடுக ஆயிரமாயிரம் மக்கள், குறிப்பாக ஏழை— நடுத்தரமக்கள் பொசுக்கும் வெயிலையும் பொருட்படுத்தாது, கூடி நின்று குதூகல வரவேற்பளித்தார்கள் என்றால் அதற்கும் காரணம் இல்லாமலில்லை. எத்தனையோ பிற்போக்குச்

சக்திகளும், ஏழை மக்களின் எதிரிகளும் அவ்வப்பொழுது காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஊடுருவி நின்றனர். ஆகவே நடுத்தர மக்களும், ஏழை மக்களும் காங்கிரசின் சமதர்ம சோஸலிச சமுதாய இலட்சியத்தைச் சிற்சில சமயங்களில் ஐயக் கண்கொண்டு நோக்க ஆரம்பித்தனர். ஆனால், நாகபுரித் தீர்மானத்தின் மூலம், காங்கிரஸ் காட்டிய நல்ல பாதையின் விளைவாக, காங்கிரசில் ஒட்டி இருந்த பிற்போக்குச் சக்திகள் ஓட்டம் எடுக்க ஆரம்பித்தன. அந்த பிற்போக்குச் சக்திகளுக்கு எல்லாம் 'சுதந்திராக் கட்சி' புகலிடமாக மாறியது!

இதன் விளைவாக காங்கிரஸ் மேலும் தூய்மைப்பட்டது. நாட்டு மக்களின் துயரினைத் துடைக்கவல்ல ஒரே சக்தி காங்கிரஸ்தான் என்பதைக் குறிப்பாக ஏழைகளும், நடுத்தர மக்களும் உணர ஆரம்பித்து விட்டனர். இதில் ஒரு எழுத்துக் கூட மிகைப்பட்ட கூற்றல்ல. ஆயிரமாயிரம் மக்களின் முகங்கள் காட்டிய 'அன்புக் கண்ணாடி'யின் தோற்றம்தான் இந்த எழுத்துக்கள்.

ஆகவே, மக்களின் 'புதியதொரு நம்பிக்கை' என்ற புது இரத்தம் பெற்ற காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பொறுப்பு இன்னும் அதிகமாகிறது. மேன்மேலும் நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்காக நம்மை நாமே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். காங்கிரஸ் ஸ்தாபனம் நாட்டு மக்களுக்குக் கொடுக்கும் நல்ல செய்தியினைப் பட்டி தொட்டிகளிலெல்லாம் பரப்பும் பணியை நாம் மேற்கொள்ள வேண்டும். நிலத்திற்கு உச்சவரம்பு, கூட்டுறவுச் சமுதாய அமைப்பு போன்ற உயர்ந்த இலட்சியங்களின் மூலம் இன்று காங்கிரஸ் மக்களிடையே புதிய வேரினைப் பாய்ச்சி, இந்திய சமுதாயத் தைப் பொலிவும், எழிலும் வண்மையும் மிக்க சமுதாயமாக மாற்றி வருகிறது. 'அறவழி நின்று பாடுபட்டு வரும் காங்கிரசுக்கு எங்கள் ஆசி உண்டு' ஆதரவு உண்டு' என்று பச்சை விளக்குக் காட்டி விட்டனர் மக்கள். இனி 'புதிய

யாத்திரை'' தயங்காமல் தடைப்படாமல் சென்று கொண்டே இருக்க வேண்டும். முட்டுக் கட்டைகள் முன்னேற்றப் பாதையைத் தடுக்குமேயானால், 'மக்கள் சக்தி' அவற்றைத் தூள் தூளாக்கி விடும் என்பதில் ஐயமே இல்லை. ஏழைகளை யும் பாமர மக்களையும் வறுமையினின்றும், அறியாமை யினின்றும் விடுவிப்பதுதான் அந்தப் 'புனித யாத்திரை! புனித யாத்திரை செல்பவன் எவ்வாறு இன்னலையும், இடைஞ் சலையும் எதிர்த்துப் போராட தன்னைத் தயார்படுத்திக் கொள்வானோ அதேபோல மக்களின் வள வாழ்வுக்கான புனித யாத்திரையைத் தொடங்கியுள்ள காங்கிரஸ் ஊழியர் களும் தங்களை மொழியாலும் மெய்யாலும் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும். இதுதான் மக்கள் காட்டும் அன்புக்கும், ஆதரவுக்கும் நாம் காட்டும் மரியாதை.

இதுதான் சஞ்சீவரெட்டி அவர்கள் தமிழகச் சுற்றுப் பயணத்தில் கண்ட காட்சி. அவர்கள் சொல்லிலேயே சொல்ல வேண்டுமானால் ''சென்னை என்றுமே காங்கிரஸ் மாகாணம். இனியும் காங்கிரஸ் மாகாணமாகவே விளங்கும். இதுவே, நான் தமிழகச் சுற்றுப் பயணத்தின் மூலம் கண்ட தெளிவான முடிவு.'' இந்தப் பொன்னெழுத் துக்களை ஒவ்வொரு காங்கிரஸ் ஊழியனும் தன் நெஞ்சத்தே நிறுத்தி சிந்தையாலும், செயலாலும் சிறக்கக் காட்டுவர் என்பதில் ஐயமில்லை.

# அதர்மம் அழிந்துபோகும்! தர்மம் நிற்கும்!

தலைவர் நேரு அவர்களுக்குக் குழந்தைகள் மீது அன்பு; அவர்கள் இவ்விழாவில் நிறைய இருக்கிறார்கள். இதைக் கண்டு நான் மிகவும் மகிழ்கிறேன்.

"ஏன், யாருக்கும் இல்லாத அன்பும், மரியாதையும் நேருவுக்கு உலகம் பூராவும் இருக்கின்றன? அதைத்தான் நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். ஒவ்வொரு நாட்டிலும் விடுதலை வீரர்கள் உண்டு. அமெரிக்காவில் லிங்கன்; அதே போல ரஷ்யாவில் வறுமை தாண்டவமாடியபோது அதை விரட்டி அடிக்க லெனின் தோன்றினார். அதேபோல குண்டுமாரி பொழிந்து உலகைக் கலக்கிய இட்லர் பிறந்த நாடாகிய ஜெர்மனி ஒரு காலத்தில் வறுமைப் பட்டிருந்தது. அந்நிலையை கெய்ஸர் மாற்றினார். அதேபோல சீனத்துச் சிங்கம் என்று பாராட்டப் பெற்றவர் சன்யாட்சென், இவர்கள் எல்லாரும் விடுதலை வீரர்கள். இவர்களில் எவரும் அடையாத புகழை நேரு பெற்றுவிட்டார். ஏன்? அவர் இந்தியாவுக்கு மட்டுமல்ல உலகத்துக்கே குரலாக விளங்குவ தான் இதற்குக் காரணம்.

"சமீபத்தில் நேரு ஐ. நா.வுக்குப் போனுர். ஏன்? யுத்தம், பஞ்சம், பயங்கரக் கொடுமைகள் ஆகியவற்றிலிருந்து உலகைக் காத்திட, அப்போது குருஷ்சேவும், ஐஸன்ஹோவரும், குடுமிச் சண்டை'யில் இருந்தார்கள். அவர்களுக்கிடையே இருந்த பூசலே, ஒழித்துக்கட்டி, நல்லுறவு ஏற்படுத்த ஒரு தலேவர் தேவைப்பட்டார். அவர் தான் நேரு.

"நேரு, பெரிய செல்வ குடும்பத்தில் பிறந்தவர். அவர் சிறையில் வாடிய கதையை எனக்கு முன்னுலே பேசியவர்கள் சொன்னுர்கள். ஏன் அவர் அப்படி சஷ்டப்பட்டிருக்க வேண்டும்? சொர்க்க போகத்திலே வாழ்ந்த நேரு, ஏன் மனவிருப்பத்தோடு, நரகத்திலே குதித்தார்? அங்கேதான் ஒரு பெரிய உண்மை தெரிய வருகிறது. தியாக மனப் பான்மைதான் பெரிய மனிதர்களுக்கு அடையாளம். நேரு $14\frac{1}{2}$ வருடங்கள் சிறையில் கிடந்தார். மக்கள் விடுதலேக்காக அத்தகைய நிலேயை முகம் சுளிக்காது ஏற்றுக்கொண்டார். இன்றைக்கும் மக்கள் முன்னேறவேண்டும் என்று அயராது உழைக்கிருர்.

"மக்கள் இதைப் பாராட்ட வேண்டாமா? அதர்ம வழியில் மயங்கி, உண்மை என்னவென்று தெரியாமல் இருந்தால் இயற்கையே சீறும். அதைத்தான் சமீபகாலப் பெருமழையில் காண்கிருேம்.

"இன்றைக்கு, மக்களுக்காகத் தமது வாழ்க்கையை அற்பணித்துக் கொண்டுள்ள நேருவின் படம் குடிசைகளிலே இருக்கிறதா என்ருல் என்ன விடை கிடைக்கிறது? தேவையற்ற—முறையற்ற ஒன்றுக்கு மதிப்பு தருவதும், உண்மையான 'அசல் வைரத்தை' மறந்து விடுவதும் நல்லதாகுமா? இதனே நாம் எல்லோரும் உணர்ந்து பார்க்கவேண்டும்.

"இன்றைய தினம் நாம் எல்லோரும் ஒருவித மயக்கத்தில் விழுந்துவிட்டோம். 'உண்மை எது, பொய் எது,' என்று தெரியாமல் சில சமயங்களில் திண்டாடுகிறோம். உண்மையான வீரத்தைப் பாராட்டியது பழங்காலக் கதையாகப் போய்விட்டது. இப்போதெல்லாம் 'அட்டைக் கத்தி' வீரர்களைப் புகழ ஆரம்பித்துவிட்டோம். ஆஹா, இவரல்லவா புரட்சிவேந்தர் என்று மெச்சுகிறோம். இதெல்லாம் மயக்க விளைவு. இந்தப் பிரச்னையின் அடிப்படை என்னவென்று பார்க்கவேண்டும். இன்றைக்குத் தர்மத்திற்கும், அதர்மத்திற்குமிடையே பலத்த போராட்டம் நடைபெறுகிறது.

"ஆம், அறத்திற்கும் மறத்திற்கும் இடையே போர் இதிலே அதர்மம் வெல்லுவதுபோல் தோற்றமளிக்கிறது. அதர்மம் வென்றுவிடுமோ வென்று நல்லவர்கள் பயப்படும் படியான வகையில் காரியங்கள் நடைபெறுகின்றன. உண்மை மதிப்பு பெறுவதில்லை. போலிகள் நம்முன்னால் வந்து மினுக்குகின்றன! காலமெல்லாம் வெஞ்சிறையில் வாடிய சீலர்கள் சரியானபடி மதிக்கப்படுவதில்லை! $1\frac{1}{4}$ நாட்கள் சிறைவாசம் செய்துவிட்டு, வெளியே வந்த உடனேயே, கடற்கரையில் கூட்டம் போட்டுத் தங்களது 'தியாகங்களை'த் தம்பட்டம் அடிப்பவர்களைப் பார்த்து மயங்குகிறோம்.

"இப்படி அதர்ம சக்திகள் மக்களை ஏமாற்றப் பார்க்கின்றன. நல்லவர்கள் வருத்தப்படுகிறார்கள். அயோக்கியர்கள் உளம் பூரிக்கிறார்கள். ஆனால் இந்நிலை என்றென்றைக்கும் நீடிக்காது. பகவான் கண்ணன் கீதையில் கூறியது போல் அதர்மம் ஜெயிப்பது போலத் தோன்றினாலும், இறுதியில் கட்டாயம் அழிந்துபோகும்; தர்மம்தான் வெற்றி பெறும். இது வரலாறு காட்டும் தத்துவ போதனையாகும்.

"நமது கடமை வெறும் கூட்டங்கள் போட்டு, பாராட்டு வழங்குவது மட்டுமல்ல. நமது தலைவர்கள் இன்றைக்கும் மதத்தானதொரு சமுதாயப் புரட்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். உதாரணமாகத் தலைவர் காமராசர் அவர்கள் கல்வித்துறையிலே பெரும் புரட்சி விளைத்து வருகிறார். ஆயிரக்கணக்கான புதிய பள்ளிச் சாலைகள் கட்டப் பட்டுள்ளன. இலட்சக்கணக்கான குழந்தைகள் படிக்கிறார்கள்.

"சில அரசியல் 'நாடோடி'கள் உண்டு. அவர்கள் ஒரு நிலையில் எப்போதும் இருக்கமாட்டார்கள். இன்றைக்கு மலையாளத்திலிருந்து தமிழ்நாடு வருவார்கள். நாளைக்கு வேறொரு இடத்திற்குக் கூடார மடித்துப் போய்விடுவார்கள். அத்தகையவர்களது உள்ளத்தில் காமராஜ் இல்லை. ஆனால் இலட்சக்கணக்கான பாட்டாளிகளது—பயிரிடும் விவசாயிகளது இதயத்தில் அவர் இருக்கிறார். (கைதட்டல்), எனவே, அவரை யாரும் அசைக்க முடியாது' (பலத்த கைதட்டல்)

"இத்தகைய சிறந்த பணிகளில் ஈடுபட்டுள்ள தலைவர்களுக்கு நாம் உறுதுணைகள். இன்று உலகம் முழுவதும் 'சமாதான தேவதை' என்று அழைக்கப்படுகிறார். கொரியா, இந்தோனேஷியா போன்ற தகராறு நடைபெற்ற நாடுகளிளெல்லாம் நமது உதவி—நேருவின் ஆதரவு—கோரப்பட்டிருக்கிறது. இப்போது குழப்பம் நிலவுகின்ற காங்கோ என்கிற நாட்டுக்குக்கூட நமது ஆதரவு அளிக்கப்பட்டு இருக்கிறது. நம்முடைய ராஜேஸ்வரரின் தயாளம்தான் அங்கு ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது!

"விளக்கு எரிந்தால் இருள் அகலும். இதேதான் இந்த விழாவை ஏற்பாடு செய்தவர்களின் எண்ணமும், மக்களிடையே அறிவு விளக்கேற்றப் படவேண்டும். அறியாமை என்னும் இருள் அகலவேண்டும். இந்த விழாவின் இறுதியில் இனிப்பு வழங்கப்போகிறார்கள், இனிப்பு என்றால் குழந்தை

களுக்கு மிகுந்த விருப்பம். மிட்டாய் இனிப்பதுபோல இலட்சியம் இனிமையானதாக—ஏற்றமுடையதாக இருக்க வேண்டும். அப்போதுதான் சமுதாயம் செழிக்கும். நல்ல குழந்தைகள் அழகாகவும் முறையாகவும் மலர்ந்து வரும் காலத்தில் சிறப்பெய்தும்.

"இந்த விழாவை ஏற்பாடு செய்த மாணவர் காங்கிரசு அன்புச் செல்வங்களுக்கு—ஆம், அவர்கள்தானே எனது உயிர்—என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்—வணக்கம்.





